# தெய்வ தரிசனம்



கல்கி



பாரதி பதிப்பகம்

தியாகராயநகரம் :: சென்னை 17.

# தெய்வ தரிசனம்

## 1

" கடவுளைக் கண்டதுண்டா ?" என்ற கேள்வியைப் பலர் கேட்டதுண்டு. ஸ்ரீ விவேகானந்தர் அவ்விதம் கேட்டதற்குப் பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணர் " ஆம் ; கடவுளை நான் கண்டிருக்கிறேன் ; உனக்கும் காட்ட முடியும் !" என்று கூறிய பதில் பிரசித்தமானது.

ஒரு மாதத்துக்கு முன்னால் என்னை யாராவது " நீர் தெய்வத்தைக் கண்டதுண்டா ?" என்று கேட்டிருந்தால், " இல்லை, ஐயா ! மன்னிக்கவும் !" என்று சொல்லியிருப்பேன். இன்று யாராவது அவ்விதம் என்னைக் கேட்டால், " ஆம் ; தெய்வத்தைக் கண்டேன். ஏப்ரல் 29-ம் தேதியிலிருந்து மூன்று தினங்கள் யாழ்ப்பாண நகரத்தில் தெய்வத்தைக் கண்டேன். தாங்களும் வந்திருந்தால் தரிசித்திருக்கலாம் !" என்று பதில் சொல்லுவேன்.

நான் கண்ட தெய்வம் தமிழ்த் தெய்வந்தான். பக்தி ஆவேசங் கொண்ட அறுபதினாயிரம் மக்களின் மத்தியில் தமிழ்த் தெய்வம் கொலு வீற்றிருக்கக் கண்டேன். அந்தக் காட்சியை நான் என்றும் மறக்க முடியாது. மீண்டு

மொரு முறை அவ்வாறு தமிழ்த் தெய்வத்தைத் தரிசிக்க முடியாவிட்டாலும், வாழுள் முழுதும் நினைத்து நினைத்து இன்புறுவதற்கும் பெருமை அடைவதற்கும் அதுவே போதும்.

* * *

"சமய கோடிகளெலாம் தன் தெய்வம் என் தெய்வம் என்று—எங்கும் தொடர்ந்து எதிர் வழக்கிடவும் நின்றதெது ?" என்று தாயுமானவர் என்னும் பெரியார் பாடியிருக்கிறார். அவர் எந்தத் தெய்வத்தைக் குறித்து இவ்விதம் கூறினார் ? தமிழ்த் தெய்வத்தைப் பற்றித்தான் அவர் சொல்லியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. சொல்லியிருந்தால் மிகப் பொருத்தமாயிருக்கும் என்பதில் ஐயமில்லை.

ஆதிநாளிலிருந்து தமிழகத்தில் குடிபுகுந்த சமயங்களெல்லாம் தமிழ்த் தெய்வத்துக்குத் தங்கள் பாத காணிக்கையைச் செலுத்திப் போற்றி யிருக்கின்றன. 'தன் தெய்வம் என் தெய்வம்' என்று போட்டியும் இட்டிருக்கின்றன. சமயப் பிரசாரம் செய்ய இங்கு வந்த பெரியார்கள் பலர் விரைவிலேயே வந்த காரியத்தை மறந்து தமிழ்த் தெய்வத்தின் வழிபாட்டில் இறங்கி யிருக்கிறார்கள். முருகனைத் தெய்வமாகக் கொண்ட பழந் தமிழர்கள் தமிழ்த் தெய்வத்தைப் போற்றி மகிழ்ந்திருக்கிறார்கள். தமிழகத்தில் ஒரு சமயம் மிகச் செல்வாக்குப் பெற்றிருந்த சமணர்களும் புத்தர்களும் தமிழ்த் தெய்வத்துக்குப் பாமாலை பல சூட்டி மகிழ்ந்தார்கள் ; காவிய அணிகளினால் அலங்கரித்து இன்புற்றார்கள். சைவர்களும் வைஷ்ணவர்களும் தத்தம் தெய்வங்களைப்பற்றிப்

பாடியபோது தமிழ்த் தெய்வத்தையும் சேர்த்தே பாடினார்கள். பிற்காலத்தில் நம் நாட்டைத் தேடிவந்த முஸ்லிம்களும் கிறிஸ்துவர்களும் தமிழ்த் தெய்வத்தைப் பணிந்தேற்றிக் காவிய மாலைகள் புனைந்திருக்கிறார்கள். தமிழ் மொழியைத் தவிர வேறு எந்த மொழியேனும் இவ்வாறு பல்வேறு சமயத்தவர்களால் கொண்டாடப் பட்டிருக்கிறதா ? சந்தேகந்தான். எனவே, தாயுமானவரின் அருள் வாக்கில் குறிப்பிட்ட தெய்வம் ஏன் தமிழ்த் தெய்வமாக இருக்கக் கூடாது ? அல்லது நாம் ஏன் அவ்விதம் வைத்துக்கொள்ளக் கூடாது ?—யாழ்ப்பாணத் தமிழ்த் திருவிழாவில் பூஜ்யர் தனிநாயகம் என்னும் பாதிரியார் இனிய தமிழில் சொற்பொழிவு ஆற்றி வந்தபோது, எனக்கு மேற்கண்டவாறு தோன்றியது. இந்தப் பாதிரியார் யாழ்ப்பாணத்தவர். தூத்துக்குடியில் வசிக்கிறார். உலகமெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்து, எங்கெங்கும் தமிழின் பெருமையை எடுத்துச் சொல்லிவிட்டுத் திரும்பியிருக்கிறார். அடடா ! எவ்வளவு அழகாக ஒவ்வொரு சொல்லையும் நிறுத்து அமைத்து, அழகிய தமிழ் நூல் எடுத்துக் காட்டுக்களுடன், அவர் சொற்பொழிவு ஆற்றினார் !

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே !"

என்று அவர் சொற்பொழிவை முடித்த பாணி எவ்வளவு நன்றாயிருந்தது ? . . .

[என்ன ? நேயர்கள் என்ன சொல்கிறீர்கள் ? இதோ, விமானப் பிரயாணத்தின்போது காதில் வைத்து அடைத்திருந்த பஞ்சை எடுத்து விட்டேன். இப்போது

நீங்கள் சொல்வது காதில் விழுகிறது. "திடுதிப்பென்று இடை நடுவில் தொடங்குகிறீரே ? கதையை ஆரம்பத்தி லிருந்தே தொடங்குக !" என்று கட்டளையிடுகிறீர்கள். சரிதானே ? ]

முதலும் நடுவும் முடிவும் இல்லாத தெய்வத்தைப் பற்றியல்லவா பேசுகிறோம் ? அதனால் எங்கே தொடங்கினால் என்ன என்று நினைத்தேன்......சரி, சரி, முதலி லிருந்தே ஆரம்பித்து விடுகிறேன்.

முதலிலிருந்து தொடங்குவது என்றால் சென்ற ஆண்டில் கோயமுத்தூரில் நடந்த தமிழ் விழாவிலிருந்து தொடங்க வேண்டும். அந்த விழாவின் போதுதான் "அடுத்த விழாவை எங்கள் ஈழநாட்டில் நடத்துங்கள்" என்று திரு கே. கனகரத்தினம் அழைத்தார். அவ்விதம் அழைத்தபோது திரு கனகரத்தினத்தின் மனதில் என்ன இருந்ததோ, தெரியாது. "நாம் சும்மா அழைத்து வைப்போம். இவர்கள் எங்கே ஒப்புக் கொள்ளப் போகிறார்கள் ?" என்று எண்ணியிருக்கலாம். அல்லது "நமது தூய யாழ்ப்பாணத் தமிழ் கொச்சைத் தமிழ் பேசுவோருக்கு எங்கே விளங்கப் போகிறது ?" என்று நினைத்திருக்கலாம். அல்லது "இவர்கள் நமது அழைப்பை ஒப்புக் கொள்வதற்கு ஒரு கடலும் இரண்டு கவர்ன்மெண்டுகளும் குறுக்கே நிற்கின்றன அல்லவா ?" என்பதை எண்ணியும் தைரியம் அடைந்திருக்கலாம். எப்படியோ, தமிழ்விழா மேடைமீது வந்து அவர் நின்று அடுத்த தமிழ் விழாவை இலங்கையில் நடத்தும்படி அழைத்துப் போட்டார் !

"கஞ்சிவரதப்பா !" என்றதும், "எங்கே வரது, அப்பா ?" என்று கையில் கப்பரையுடன் எழுந்தானே, அந்தக் கதையாக, தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரும் அவருடைய அழைப்பை ஒப்புக் கொண்டு விட்டார்கள். ஒப்புக்கொண்டு, திருவிழா நடத்துவதற்குரிய பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்து வருவதற்காக, தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் காரியதரிசிகளையும் தூது அனுப்பி வைத்தார்கள்.

**கா**ரியதரிசிகள் எட்டு மாதத்துக்கு முன்னல் இதற்காக யாழ்ப்பாணம் சென்றிருந்தபோது, அங்கிருந்த சூழ்நிலை அவ்வளவு உற்சாகமளிப்பதாக இல்லை. யாழ்ப்பாணத்தில் பூர்வாங்கக் கூட்டம் ஒன்று நடந்தது. திரு கே. கனகரத்தினம் கையொப்பமிட்டு அழைப்பு அனுப்பிக் கூட்டத்தைக் கூட்டினர். அது சம்பந்தமாகவே சில புகார்கள் எழுந்து விட்டன. "இன்னினருக்கு அழைப்புப் போகவில்லை. இது எப்படிப் பிரதிநிதித்துவம் வாய்ந்த கூட்டமாகும் ? இன்னும் பலருக்கும் அழைப்பு அனுப்பிப் பெரிய கூட்டமாகக் கூட்டி முடிவு செய்யவேண்டும்" என்று சிலர் சொன்னர்கள். இன்னும் சில நண்பர்கள் திருவாரூரில் நடந்த தமிழ்த் திருவிழாவுக்கு வந்திருந்தவர்கள். திருவாரூர் விழா அவர்களை மலைக்கச் செய்திருந்தது. "அந்த மாதிரியெல்லாம் நம்மால் எப்படி நடத்த முடியும் ? அதற்கு வேண்டிய சாதனங்கள் எங்கே ? பணம் எங்கே ? குறைந்த பட்சம் முப்பதினுயிரம் ரூபாய் வேண்டியிருக்குமே ? எங்கே போகிறது ?" என்று சொல்லி வந்திருந்தவர்களைப் பயப்படுத்தினர்கள்.

இவற்றுக்கெல்லாம் ஸ்ரீ தூரனும் நானும் பதில் சொல்லித் தைரியமும் சொல்ல வேண்டியதாயிருந்தது.

"பணம் பிரதானம் அன்று; அன்பும் ஆர்வமுந் தான் முக்கியம். அவை இந்நாட்டில் வேண்டிய அளவு இருக்கின்றன. திருவாரூரில் நடந்தது போல் அவ்வளவு பிரமாதமாக நீங்கள் நடத்த வேண்டியதில்லை. திருவாரூரில் மிகப் பெரிய தேர் இருக்கிறது. அதனால் வேறு ஊர்களில் தேர் விடாமல் இருக்க முடியுமா? உங்கள் ஊருக்குத் தகுந்தாற்போல், நீங்கள் விழா நடத்துங்கள்!" என்று கூறினோம்.

மகாநாட்டை அழைத்த திரு கனகரத்தினத்தின் முகமோ சோர்ந்து வாட்டமுற்றிருந்தது. ஆனால் அவர் தைரியத்தைக் கைவிட்டு விடவில்லை. "மலையைத் தூக்கு வதற்குத் தயார்!" என்றுதான் இன்னமும் கூறினார். ஆனால் ஒரு நிபந்தனை விதித்தார். "மலையின் ஒரு பக்கத் தைத் திரு. எஸ். நடேசன் பிடிக்கட்டும்; நான் இன்னொரு பக்கத்தைப் பிடித்துத் தூக்கி விடுகிறேன்!" என்றார். "பின்னால் எல்லாரையும் கூட்டிப் பெரிய வரவேற்புச் சபை அமைப்போம். இன்றைக்கு நல்ல நாளில் துவங்கி விடுவோம்!" என்றார். கடைசியில் அங்கே வந்திருந் தவர்கள் அனைவரையும் அங்கத்தினராகக் கொண்ட ஒரு கமிட்டி நிறுவப்பட்டது. திரு நடேசன் அதன் தலைவ ராகவும் திரு கனகரத்தினம் உபதலைவராகவும் நியமிக்கப் பட்டார்கள். வந்திருந்தவர்களை அதைரியப்படுத்திப் பேசிய ஸ்ரீ அம்பிகை பாகனும் அதுவரை ஒரு வார்த்தையுமே பேசாத திரு. க. நவரத்தினமும் காரிய தரிசிகளாக நியமனம் பெற்றார்கள்.

இந்தக் கூட்டத்தின் முடிவில் நடந்த ஒரு சிறிய நிகழ்ச்சி எங்களுக்கு ஓரளவு தைரியம் அளித்து, நம்பிக்கையும் ஊட்டுவதா யிருந்தது. கூட்டம் தொடங்கியதி லிருந்து மோன விரதம் கொண்டிருந்த திரு க. நவரத்தினம், கூட்டம் கலையத் தொடங்கியதும் சட்டென்று எழுந்து நின்றார். "இங்குள்ளவர் ஒவ்வொருவரும் தலைக்குப் பத்து ரூபாய் கொடுத்து விட்டுப் போக வேண்டும். வேலை தொடங்குவதற்குப் பணம் வேண்டும் அல்லவா ?" என்றார். அவ்விதமே பலர் பணம் கொடுத்தார்கள். சிலர் கையொப்ப மிட்டார்கள்.

"காரியதரிசி சரியானபடி அமைந்து விட்டார்; ஆகையால் விழாவும் நன்றாக நடைபெறலாம்" என்ற நம்பிக்கை அப்போதுதான் எனக்கு ஏற்பட்டது.

மே மாதம் முதல் தேதி மாலை பரமேசுவரக் கல்லூரி மைதானம் ஒரே ஜன சமுத்திரமாகக் காட்சி அளித்தபோது, நாலாவது தமிழ்த் திருவிழா கோலாகல ஆரவாரங்களுடன் முடியும் தறுவாயிலிருந்தபோது, மேலே கூறிய பூர்வாங்கக் கூட்டத்தின் ஞாபகம் எனக்கு வந்தது. மேடையில் வீற்றிருந்தவர்களின் திருமுகங்களைப் பார்த்தேன். யாழ்ப்பாணத்தார் ஒவ்வொருவருடையமுகத்திலும் பெருமிதமும் எக்களிப்பும் தாண்டவமாடின. திரு எஸ். நடேசன் அவர்கள் அப்போதுதான் தலையிலிருந்து மலையை இறக்கி வைத்தவர் போலக் காணப்பட்டார். ஐந்தாறு நாளாகக் கவலை தேங்கி யிருந்த முகத்தில் இப்போது களை ததும்பிற்று. திரு கனகரத்தினத்தின் உள்ளத்திலிருந்து குதூகலம் பொங்கி வழிந்ததென்பது நன்கு தெரிந்தது. அதுவரையில்

அம் மேடையில் பின்னுலேயே இருந்தவர் இப்போது முன்வந்திருந்தார். புகைப்படக்காரர்களுக்குப் பயந்து ஒதுங்கிக் கொண்டிருந்தவர் இன்றைக்குப் படம் பிடிப் பதற்கும் முன்னுல் வந்து நின்ருர். தமிழ்விழாவை இலங்கைக்கு அழைத்த போது திரு கே. கனகரத்தினம் பார்லிமெண்டரி காரியதரிசியா யிருந்தார். தமிழ் விழா வின்போது தாற்காலிகக் கல்வி மந்திரி பதவி வகித்தார். இனி, அரசியல் துறையில் அவர் வேறு எந்த எந்தப் பெரிய பதவிக்கு வந்தாலும், இந்தத் தமிழ் விழாவை வெற்றிகரமாக நடத்திக் கொடுத்ததில் ஏற்பட்ட ஆனந்தம் வேறு எதிலும் அவருக்கு உண்டாக்கக் கூடும் என்று எனக்குத் தோன்றவில்லை.

டாக்டர் குருசாமி, திரு காராளசிங்கம், முதலியார் சின்னத்தம்பி, அருளம்பலம், இராஜ அரியரத்தினம் ஆகியவர்கள் ஆனந்த பூரிதமான முகங்களுடனே காணப் பட்டார்கள். திரு அம்பிகைபாகன் இந்த உலகத்தில் இருப்பவராகவே தோன்றவில்லை. களைப்பினுலும் களிப் பினுலும் அவருடைய கண்கள் பஞ்சடைந்து போய் இருந்தன.

விழா முடிவதற்குக் கொஞ்ச நேரந்தான் பாக்கி யிருந்த சமயத்தில், மேடைக்குப் பின்னுல் தென்னங் கீற்றுத் தட்டிக்கு அருகில் ஒருவர் சுருட்டுப் பிடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். ஸ்ரீ அம்பிகை பாக னுக்கு அந்தத் திக்கைச் சுட்டிக் காட்டினேன். அவர் பார்த்துவிட்டுச் சும்மா இருந்தார்.

“என்ன ஐயா, சும்மா இருக்கிறீர்களே?” என்றேன்.

“அதனுல் என்ன?” என்ருர் அம்பிகைபாகன்.

"அதோ ஒருவர் சுருட்டுக் குடிக்கிருரே !"

"அதனுல் என்ன ?"

"ஓீற்றுக்குப்பக்கத்தில் நிற்கிருரே ?"

"அதனுல் என்ன ?"

"ஓீற்றில் தீப்பிடித்துக் கொண்டால் ?"

"அதனுல் என்ன ?"

"பந்தலுக்கு ஆபத்து வருமே ?"

"அதனுல் என்ன ?"

விழா முடியும் சமயம் நெருங்கிவிட்டபடியால் இனி எது எப்படிப் போனுல் என்ன என்ற நிலையில் ஸ்ரீ அம்பிகைபாகன் இருந்தார். அவரிடம் சொல்லிப் பயனில்லை யென்று நான் முடிவு செய்த சமயத்தில் இன்னெருவர் எழுந்து சுருட்டுப் பிடித்தவரை நோக்கிப் போவதைக் கண்டேன். "நல்லவேளே ! இவர் போய் அவர் சுருட்டுப் பிடிப்பதை நிறுத்தி விடுவார் !" என்று தைரியம் அடைந்தேன். அடுத்த நிமிஷத்தில், ஒருவர் சுருட்டுப் பிடித்துக்கொண்டு நின்ற இடத்தில் இரண்டு பேர் சுருட்டுப் பிடித்துக் கொண்டு நின்ருர்கள் ! "நிலைமை நம்மை மீறிப் போய்விட்டது ! கடவுள்தான் காப்பாற்ற வேண்டும் !" என்று எண்ணிக்கொண்டேன். கடவுள் காப்பாற்றினுர். தமிழ்த் தெய்வம் தண்ணருள் புரிந்தது. எல்லாம் சுபமாகவே முடிந்தது.

காரியதரிசி ஸ்ரீ நவரத்தினம் அவர்களே மூன்று நாளாகத் தேடிக்கொண்டிருந்தும் அவர் என் கண்ணில் படவில்லை. அவரைப் பார்த்துக் கையைப் பிடித்துக்

குலுக்கி ஒரு "சபாஷ்!" சொல்லுவதற்குத்தான் தேடினேன். ஆள் அகப்படவே இல்லே. ஒருவரிடமும் ஒரு வார்த்தையும் பேசாமல் பம்பரம்போலச் சுற்றிச் சகல காரியங்களையும் நிர்வகித்தவர் அவர்தான் என்று அனே வரும் சொன்னுர்கள். விழா நடந்து முடிந்த மறுநாள் தான் அவரைப் பார்க்க முடிந்தது. பார்த்ததும் கையைப் பிடித்துக் கொண்டு "அபாரமாய் விழாவை நடத்தி விட்டீர்கள்!" என்று சொல்லியபடி அவர் முகத்தைப் பார்த்தேன். முகத்தைக் காணவில்லே; ஆளையும் காண வில்லே. சற்றுத் தூரத்தில் அவர் முதுகுதான் தெரிந்தது. "என்னத்திற்காக இப்படி முதுகு காட்டி ஓடுகிருர்?" என்று பக்கத்திலிருந்த நண்பர்களைக் கேட்டபோது, "விழாப் பந்தலைக் கிட்ட இருந்து பிரிப்பதற்காகப் போகிருர்!" என்ருர்கள். இப்படி ஒரு நவரத்தினம் இருக்கிற தைரியத்திஞல் அல்லவா அன்று ஸ்ரீ கனக ரத்தினம் தமிழ் விழாவை இலங்கைக்கு அழைத்தார் என்று எண்ணிக் கொண்டேன்......

நேயர்கள் மன்னிக்கவேண்டும். இந்தத்தடவை நிச்சயமாக ஆரம்பத்திலிருந்தே தொடங்கி விடுகிறேன்.

தமிழ்த் திருவிழாவை இலங்கையில் நடத்துவது என்று அவ்விடத்து நண்பர்கள் நிச்சயமான முடிவுக்கு வந்த பிறகு, "இங்கு எல்லாம் ஒழுங்கு செய்து விடுகிருேம். விழாவுக்குத் தலைமை வகிப்பதற்கு மட்டும் தக்கவர் ஒருவரை ஒழுங்கு செய்து அனுப்புங்கள்!" என்று எழுதிக் கொண்டிருந்தார்கள். விழாவுக்குத் தலைமை வகிக்கத் தக்கவர் ஒருவரைத் தேடத் தொடங்கினேம். தேடிக் கண்டு பிடித்தோம். "சுதேசமித்திரன்" பத்திரி

காசிரியர் திரு சி. ஆர். சீனிவாசன் தான் அவர். பன்னெடுங்காலத் தமிழ் வளர்ச்சிக்குத் துணை புரிந்து வந்திருப்பது "சுதேசமித்திரன்" பத்திரிகை. பாரதியார் உதவி ஆசிரியராயிருந்து பணி செய்யும் பாக்கியம் பெற்ற பத்திரிகை. அதன் ஆசிரியரைக் காட்டிலும் அதிக தகுதியுடையவர் ஒருவரை எப்படிக் கண்டு பிடிக்க முடியும்? அத்துடன், யாழ்ப்பாணத்தில் நடக்கும் தமிழ்த் திருவிழாவுக்கு ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் தலைமை வகிப்பதில் இன்னொரு இனிய பொருத்தமும் உண்டு. யாழ்ப்பாணம் புகையிலைக்குப் பெயர் போனது. யாழ்ப்பாணத் தமிழர்கள் சுருட்டுப் புகையை வெளியில் விட்டுக்கொண்டே தமிழின் சாரத்தை அருந்தி மகிழ்கிறவர்கள். திரு சி. ஆர். சீனிவாசன் அவர்களோ புகையிலையை வாயிலேயே அடக்கி வைத்துக் கொண்டிருப்பவர். புகையிலைச் சாற்றையும் தமிழின் இன்பத்தையும் சேர்த்தே எப்போதும் ரஸித்து ஆனந்திப்பவர்!

எனவே, திருவிழாத் தலைவராகத் திரு சி. ஆர். சீனிவாசனை ஒழுங்கு செய்வதற்கு யாழ்ப்பாணத் தமிழர்கள் உற்சாகத்துடன் இசைந்ததில் வியப்பில்லைதானே ?

அது போலவே, சொல்லின் செல்வராகிய பேராசிரியர் சேதுப்பிள்ளை அவர்கள் இலக்கிய மகாநாட்டின் தலைவராகவும், உலகப் புகழ்பெற்ற டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் விஞ்ஞான மகாநாட்டின் தலைவராகவும் ஒழுங்கு செய்யப்பட்டார்கள். மற்றும் தகுதி வாய்ந்த சொற்பொழிவாளர்கள் பலரும் அழைக்கப்பட்டார்கள்.

இந்தச் செய்திகள் எல்லாம் வெளியாக வெளியாக, தமிழகத்திலுள்ள தமிழ் அன்பர்கள் பலருக்கும்

யாழ்ப்பாணத் தமிழ் விழாவுக்குச் சென்று பங்கு பற்ற வேண்டும் என்ற ஆசை உண்டாகிவிட்டது.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் காரியதரிசிகளுக்குக் கடிதங்களும் தந்திகளும் வந்து குவிய ஆரம்பித்தன.

"இந்த ஊரிலிருந்து நாங்கள் சுமார் பதினைந்து பேர் யாழ்ப்பாணத்தில் நடக்கும் தமிழ் விழாவுக்கு வர விரும்புகிறோம். அதற்கு வேண்டிய பாஸ்போர்ட், விஸா முதலியவை ஏற்பாடு செய்து அனுப்பவும்."

"நானும் என் நண்பர்கள் ஏழெட்டுப் பேரும் யாழ்ப்பாணம் வருவதென்று முடிவு செய்து விட்டோம். அதற்குப் பாஸ்போர்ட், விஸா வகையராக்களை எடுத்துவரவும். வழியில் உங்களுடனே சேர்ந்து கொள்ளுகிறோம்."

இப்படியெல்லாம் பல நண்பர்கள் எழுதினார்கள். விழாவுக்கு இரண்டு நாளைக்கு முன்பு சிலர் பிரயாண வசதிக்கு முயற்சி செய்யத் தொடங்கினார்கள்.

பாஸ்போர்ட், விஸா எடுப்பது அவ்வளவு எளிய காரியமில்லை என்பதை இச்சமயத்தில் நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஒருவருக்காக இன்னொருவர் செய்யக்கூடிய காரியமும் அன்று. பிரயாணத் தேதிக்குக் குறைந்தது ஒரு மாதத்திற்கு முன்பு பிரயத்தனம் தொடங்கவேண்டும். பாஸ்போர்ட் என்பது இந்த நாட்டிலிருந்து வெளியே போவதற்கு இந்த நாட்டுச் சர்க்கார் கொடுக்கும் அனுமதி. விஸா என்பது எந்த நாட்டுக்குப் போகிறோமோ அந்த நாட்டு அரசாங்கத்தாரின் சம்மதத்தின் பேரில் பெறப்படும்

அநுமதி. பிரயாணத்துக்குக் காரணத்தைச் சொல்லி விண்ணப்பம் போட்டுப் பெறவேண்டும். புகைப்படம் எடுத்துப் பாஸ்போர்டில் ஒட்டவேண்டும். அம்மை ஊசி, காலரா ஊசி போட்டுக் கொண்டதற்கு அத்தாட்சிப் பத்திரங்கள் வேண்டும்.

இவ்வளவு சங்கடங்களுக்கும் உள்ளாகித் தமிழ் நாட்டிலிருந்து எவ்வளவு பேர் யாழ்ப்பாணத் திருவிழா வுக்கு வந்திருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்? ஏறக் குறைய ஐந்நூறு பேர் வந்திருந்தார்கள்! குடும்பத்தோடு பிரயாணமாகி வந்தவர்களுக்கு மட்டும் லேடி ராமநாதன் பெண்கள் கலாசாலையில் ஜாகை தரப்பட்டிருந்தது. அப்படிக் குடும்பத்தோடு வந்தவர்களே நூற்றைம்பது பேர் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்! சென்னையி லிருந்தும் கோயமுத்தூர் தஞ்சாவூர் ஜில்லாக்களி லிருந்தும் வந்தவர்கள் அதிகம். அப்படிப் பல தொல்லை களுக்கு உள்ளாகி வந்தவர்கள் கொடுத்து வைத்த வர்கள் என்பதில் ஐயமில்லை.

* * *

யாழ்ப்பாணத் தமிழன்பர்களின் விருப்பத்தின்படி விழாவிற்கு இரண்டு நாள் முன்னதாகவே ஸ்ரீ பெரிய சாமித் தூரனும் நானும் அங்கே போய்ச் சேர்ந்தோம். 27உ மாலை பரமேசுவரக் கல்லூரி மைதானத்தில், திருவிழா பந்தலுக்கு எதிரில் தமிழ்க் கொடி ஏற்று விழா நடந்தது. தமிழ்க் கொடி மரத்தைச் சுற்றிலும் விழாவில் பணி செய்வதற்கு முன் வந்த இருநூறு தொண்டர்கள் வட்ட வடிவமாக நின்றார்கள். தொண்டர்கள் என்றால் மற்ற இடங்களில் பெரும்பாலும் இளம் பிள்ளைக

ளாக இருப்பது வழக்கம். இளம் பிள்ளைகள் ஆரம்பத்தில் உற்சாகமாக வேலை செய்வார்கள். போகப் போக அவர்களுடைய உற்சாகம் குறைந்துவிடும். சிலர் நடுவில் துப்பாக்கியைப் போட்டு விட்டுப் போய் விடுவார்கள்! இங்கே, தமிழ் விழாவில் தொண்டு செய்ய வந்தவர்களோ பெரும்பாலும் முதிர்ந்தபிராயத்தவர்கள். படித்தவர்கள் என்றும் அறிவாளிகள் என்றும் பார்த்தவுடனேயே தெரிந்தது. மேலும் விசாரித்தபோது அவர்களில் பலர் கலாசாலை ஆசிரியர்கள் என்று அறிந்து கொண்டோம். இத்தகைய அறிவாளிகள் இருநூறு பேர் தமிழ்விழாவில் தொண்டு செய்ய முன் வந்து கொடி மரத்தைச் சுற்றி வட்ட வடிவமாக நின்ற காட்சி ஓர் அற்புதக் காட்சியாயிருந்தது.

மூவேந்தர்களின் சின்னங்களான புலி, மீன், வில் இவற்றுடன் யாழின் சித்திரமும் பொறித்த தமிழ்க் கொடியை வரவேற்பு சபைத்தலைவர் திரு. எஸ். நடேசன் உயர்த்தினர். உயர்த்திப் பறக்கவிட்ட பிறகு தமிழின் தொன்மைச் சிறப்பையும் வருங்கால வளர்ச்சியையும் பற்றிச் சில வார்த்தைகளை அழகுறச் சொன்னர். திருகோணமலையைச் சேர்ந்த திரு. ராஜகோபால் என்னும் வீரத் தமிழர் தமிழ்த் தெய்வத்தின் புகழைக் கீர்த்தன ரூபத்தில் பாடினர்.

சங்கீதக் கச்சேரிகளில் "களை கட்டியது" என்கிருர்களே, அதுபோல, தமிழ்க் கொடியைப் பறக்கவிட்ட உடன், தமிழ்த் திருவிழாவும் களை கட்டிவிட்டது.

**ச**மீபத்திலே ஒரு நாள் நான் திருவள்ளுவரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது, "என்ன, ஐயா,

இப்படிக் கல்லைத் தூக்கிப் போட்டு விட்டீரே?" என்று கேட்டேன். அவர் அச்சமயம் நூல் பஞ்சம் காரணமாகக் கைத்தறியைச் சும்மா போட்டுவிட்டுச் "சத்தியாக்கிரஹம் செய்யலாமா? அல்லது மந்திரிகளுக்குக் கறுப்புக் கொடி பிடிக்கலாமா?" என்று யோசித்துக் கொண்டிருந்தார். ஆகையால், நான் கூறியதற்குத் தவருகப் பொருள் செய்து கொண்டு, "சேச்சே! கல்லைத் தூக்கிப் போடுகிறதாவது? அது யார் செய்கிற வேலை? மந்திரிகளின் மீது கல்லைத் தூக்கிப் போடுவது என்ருல், அப்புறம், நாட்டிலே இருக்கிற பஞ்சமெல்லாம் போதாதென்று கல்லுக்கு பஞ்சம் வந்து விடுமே?" என்ருர்.

"ஐயையோ! நான் அப்படி ஒன்றும் சொல்லவில்லையே? என் தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டு விட்டீர் என்றல்லவா சொன்னேன்!" என்றேன்.

"அடடா! கல்லுக்குக் காயம் பட்டு விட்டதோ!" என்ருர் திருவள்ளுவர்.

"இல்லை இல்லை! உம்முடைய குறள் ஒன்றைப் பற்றிச் சொல்ல வந்தேன்.

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்ருமை நன்று'

என்பதாக ஒரு குறள் பாடியிருக்கிறீர் அல்லவா? அதைத்தான் குறிப்பிட்டேன். ஒருவன் தோன்றும் போதே எப்படி ஐயா, புகழுடன் தோன்ற முடியும்? ஸீஸர் என்ன, நெப்போலியன் என்ன, ஹிட்லர் என்ன, மக் ஆர்தர் என்ன,—இப்படிப்பட்டவர்களெல்லாம் கூடப் பிறந்த பிறகு தோலைக் கடித்து, துருத்தியைக் கடித்து, அப்புறந்தானே வேட்டை நாய் ஆகி

யிருக்கிறார்கள்? பிறக்கும்போதே புகழுடன் பிறந்தவன் ஒருவனைப் பற்றித்தான் காவிய இதிகாசங்களிலேகூட நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். துரியோதனன் பிறந்த போது பதினாயிரம் நரிகள் ஏக காலத்தில் சுருதி பேதம் செய்து ராகமாலிகை ஸ்வரம் பாடினவாம்! துரியோதனனைப்போல் எல்லோரும் பிறக்க முடியுமா? அல்லது பதினாயிரம் நரிகளைப் பிடித்து வந்து ஆர்ச்செஸ்ட்ரா சங்கீதம் பாட வைக்க முடியுமா? 'தோன்றுகிறபோதே புகழுடன் தோன்ற வேண்டும், இல்லாவிட்டால் தோன்றாமலே இருக்க வேண்டும்' என்றால், எப்படி அது சாத்தியம்? தோன்றாமலிருப்பதுதான் நம்முடைய வசத்தில் இருக்கிறதா?" என்று சரமாரியாகப் பொழிந்தேன்.

வள்ளுவர் திக்குமுக்காடிப் போனார். நல்ல வேளையாக அச்சமயம் வீதியில் "வடநாட்டுச் **சுரண்டல்** ஒழிக! தென்னாட்டுச் **சுண்டல்** வாழ்க!" என்ற கோஷம் கேட்கவே, எங்கள் பேச்சும் அத்துடன் முடிந்தது.

* * *

**பி**றக்கும்போதே புகழுடன் பிறப்பது கடினமான காரியந்தான்; இல்லை என்று சொல்லவில்லை. பிறந்த பிறகு புகழ் பெறுவது இலேசான காரியமா? அதற்கும் எவ்வளவோ தடங்கல்கள் இருந்து தொலைகின்றன. சில பாக்கியசாலிகள் அத் தடங்கல்களை யெல்லாம் தாண்டிப் புகழ் பெறுகின்றனர். 'பூத உடம்பு மாயினும் புகழுடம்பு மாயாத' சிரஞ்சீவிகளாகின்றனர். ஈழ நாட்டில் பிறந்த தமிழர்களில் அவ்விதம் புகழுடம்பை நிலை

நாட்டிச் சென்ற மூவரைத் தாய் நாட்டில் உள்ள நாம் அறிவோம். ஸ்ரீ ஆறுமுக நாவலர், ஸர் பொன்னம்பலம் ராமநாதன், சுவாமி விபுலானந்தர் என்னும் பெயர்களை அறியாத தமிழர் யார்? இந்த மூன்று தமிழ்ப் பெரியார் களின் திருநாமங்களையும் யாழ்ப்பாணத்தில் நடந்த தமிழ்த் திருவிழாவில் ஒவ்வொரு விதத்தில் சம்பந்தப் படுத்தி யிருந்தார்கள்.

தமிழ்த்தாயின் ஊர்வலம் **ஸ்ரீ ஆறுமுக நாவலரின்** மடாலயத்திலிருந்து ஆரம்பமாயிற்று. தமிழ் விழாவுக் கென்று அமைந்திருந்த அலங்காரப் பந்தல் **'விபுலானந்தர் பந்தல்'** என்ற பெயருடன் திகழ்ந்தது. அந்தப் பந்தலில் தமிழ்த் திருவிழா தொடங்குவதற்கு முதல் நாள் **ஸர் பொன்னம்பலம் ராமநாதன் அவர் களின் நூற்றாண்டு விழா** நடைபெற்றது. இந்த விழா வுக்குத் தலைமை வகிப்பதற்கென்று சென்னையின் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்கள் விஜயம்செய்திருந்தார்கள். சென்னை மாஜி கல்வி மந்திரி திரு. அவிநாசிலிங்கம், இலங்கை தாற்காலிக கல்வி மந்திரி கனம் கே. கனக ரத்தினம், இலங்கை அரசாங்கத்தின் காரியதரிசி சர். கந்தையா வைத்தியநாதன் ஆகியோர் இந்த விழாவில் சொற்பொழிவு ஆற்றிப் பரிமளிக்கச் செய்தார்கள்.

முதலாவது உலக மகாயுத்தம் நடந்தபோது ஒரு சமயம் இலங்கையில் இராணுவச் சட்டம் அமுலில் இருந்தது. இராணுவச் சட்டம் அமுலில் இருந்தால் இராணுவ அதிகாரி வைத்ததுதான் சட்டம். யாரை வேண்டுமானால் சுட்டுக் கொல்லும்படி அவர் உத்தரவு போட்டுவிடலாம். இலங்கை மக்கள் அனைவரும்

கதிகலங்கிப் போயிருந்தார்கள். அந்த நிலைமையிலும் தீரத்துடன் இருந்த ஒரே மனிதர் ஸர் பொன்னம்பலம் ராமநாதன் அவர்கள்தான். குற்றமற்ற இளைஞன் ஒருவனை அவ்விதம் சுட்டுவிடும்படி இராணுவ அதிகாரி உத்தரவு போட்டார். ஸர் பி. ராமநாதன் அந்த இராணுவ அதிகாரியைப் பார்க்கப் போனார். குறிப்பிட்ட இளைஞனைச் சுட்டுக் கொல்லும்படி உத்தரவிட்டது அநியாயம் என்று எடுத்துச் சொன்னார். "நீர் யார் இதில் தலையிடுவதற்கு? உம்மையும் சுட்டுக்கொல்லச் செய்வேன்!" என்றான் ஜெனரல்டையரின் அண்ணனை அந்த இராணுவ அதிகாரி. "**நீர் என்னைச்சுட்டுக் கொல்லலாம். ஆனால் நீர் என் உடம்பைத்தான் சுடலாமே தவிர என் ஆத்மாவைச் சுட முடியாது**" என்றார் ஸர் பி. ராமநாதன். இப்படி ஸர் ராமநாதன் கூறிய பதிலின் மூலமாக இலங்கை மக்களே தங்கள் ஆத்மாவைக் கண்டனர் என்று சொல்லலாம். போர்ச்சு கீசியர் இலங்கையில் அடிவைத்த காலத்திலிருந்து அன்னி யருக்கு அடிமைப்பட்டு, பூர்வீக ஆத்ம ஞானத்தையும் பாரமார்த்திகப் பெருமையையும் கலாச்சாரச் சிறப் பையும் தன்மதிப்பையும் இழந்து வாழ்ந்த இலங்கை மக்கள், மேற்கூறிய சம்பவத்திலிருந்து மனிதத் தன்மையைத் திரும்ப அடைந்தனர். தங்களுக்கு ஆத்மா ஒன்று உண்டு, அதன் சக்தியைக் கொண்டு எவ்வளவு கொடிய மிருக பலத்தையும் தைரியமாக எதிர்த்து நிற்கலாம் என்பதை உணர்ந்தனர்.

இலங்கை இந்நாளில் அடைந்திருக்கும் முன் னேற்றங்கள் எல்லாவற்றுக்கும் மூல காரணமானவர்

ஸர் பொன்னம்பலம் ராமநாதன். சமயம், சமூகம், கல்வி, அரசியல், பண்பாடு ஆகிய எல்லாத் துறைகளிலும் அவர் முன்னேற்றத்துக்கு அடிகோலினர். எல்லாவற்றிலும் முக்கியமாக ஆங்கில நாகரிகத் தாக்குதலினல் புத்துயிர் பெற்ற ஹிந்து சமூகப் பண்பாட்டின் தலை சிறந்த பிரதிநிதியாக ஸர் பொன்னம்பலம் ராமநாதன் விளங்கினர். அத்தகையவருடைய நூற்றாண்டு விழாவுக்குச் சென்னையில் தற்சமயம் நமது கலாச்சாரத்தின் சிறந்த பிரதிநிதியாக விளங்கும் பிரதம நீதிபதி ராஜமன்னர் அவர்கள் தலைமை வகித்தது மிகப் பொருத்தமே அல்லவா ?

நீதிபதி ராஜமன்னர் ஆங்கிலத்திலேதான் பேசினர். திருவையாற்றில் செய்ததுபோல் இங்கேயும் ஒருபாட்டுப் பாடி எல்லாரையும் திணறச் செய்துவிடுவாரோ என்று பார்த்தேன். அவ்விதம் செய்யவில்லை.

ஆனல் அவருடைய பேச்சே ஓர் இனிய பாடலைப் போல் இருந்தது. திருவாசகத்தையோ அல்லது கிருஷ்ண கர்ணமிருத சுலோகத்தையோ ராகமாலிகையில் அமைத்து இனிய குரலில் பாடுவது போலிருந்தது அவர் பிரசங்கம்.

அந்த மகா சபையை அன்று உண்மையில் திணறச் செய்தவர் ஸர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள்தான். இவர் ஆங்கிலத்தில் தமது பிரசங்கத்தை எழுதிக்கொண்டு வந்திருந்தார். பேச எழுந்தபோது கூடக் கையில் வைத்திருந்தார். ஆனல் அங்கேயிருந்த சூழ்நிலை அவரைத் தமிழில் பேசும்படி செய்துவிட்டது !

சொல்லவந்த பொருள் உள்ளத்தில் தெளிவாக இருந்தால் தாய் பாஷை தானாக வந்து தொண்டுசெய்யும் என்பதற்கு ஸர் வைத்தியநாதனின் பேச்சு உதாரணமாக அமைந்தது. (மறுநாள் டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்களுடைய பேச்சும் இதையே உறுதிப்படுத்தியது.) அவர் கூறினார் :—

" நானும் கம்ப ராமாயணத்திலிருந்து ஒரு பாடல் சொல்லப் போகிறேன் !

'வாள் கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார் ?'

அம்மாதிரியே ஸர் பொன்னம்பலம் ராமநாதனுடைய பெருமையை முழுதும் கண்டவர் யார்? நான் ஒரு சிறிது கண்டேன். அதைச் சொல்லப் போகிறேன்" என்றதும் சபையில் ஒரே குதூகலம். ஆயினும் ஸர் பொன்னம்பலம் ராமநாதனின் பெருமையை முழுமையும் ஒரே வாக்கியத்தில் அவர் சொல்லிவிட்டார். அது அவருடைய பேச்சில் கடைசி வாக்கியமாக அமைந்தது.

ஸர் பி. ராமநாதன் அவர்களுடைய முழுவடிவப் படத்தை அன்று மாலை ஊர்வலமாக எடுத்துக்கொண்டு வந்து மேடைக்குப் பக்கத்தில் வைத்திருந்தார்கள். அந்தக் கம்பீர புருஷருடைய தத்ரூப வடிவம் சபையோர் முன்னால் இருந்துகொண்டேயிருந்தது. இதைக் குறிப்பிடாமல் குறிப்பிட்டு ஸர் கந்தையா சொன்னார் :— " ஸர் பி. ராமநாதன் இல்லாவிட்டால் நமக்கு ராமநாதன் கல்லூரி இல்லை ; பரமேசுவரக் கல்லூரி இல்லை ; வீதிகளிலே தூக்கிக்கொண்டு போய் ஊர்வலம்

விடுவதற்குப் படமும் இல்லை !" என்று பேச்சை முடித்துவிட்டு அவர் உட்கார்ந்தபோது சபையோர் பலத்த கரகோஷம் செய்து மகிழ்ந்ததில் வியப்பு ஒன்று மில்லை. ஸர் பி. ராமநாதனுடைய படமே உயிர் பெற்றுக் கரகோஷம் செய்திருந்தால் கூட எனக்கு வியப்பாயிருந்திராது.

படத்தை வீதிகளில் எடுத்துக்கொண்டுபோய் ஊர்வலம் விடக்கூடிய பெருமை வாய்ந்த மகான் இலங் கையில் ஸர் ராமநாதன் ஒருவரே, என்பதை எவ்வளவு நயமாக அந்தக் கடைசி வாக்கியத்தில் சொல்லிவிட்டார் !

* * *

அன்றிரவு தமிழ்த் திருவிழா நிர்வாகிகள் யாருமே தூங்கவில்லை. மறுநாள் நடக்க வேண்டிய திருவிழா ஏற்பாடுகளில் பலரும் முனைந்து ஈடுபட்டிருந்தார்கள். இன்னும் சிலர் கவலையினால் தூங்கவில்லை. "குளிக்கரை பிச்சையப்பா வந்துவிட்டாரா ?" என்று ஒருவருக் கொருவர் ஆள்விட்டுக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். சிலர் அந்த அவசரக் குழப்பத்தில் "பிச்சைக்கரைக் குளியப்பா வந்துவிட்டாரா ?" என்று ஒருவரை யொருவர் விசாரித்தார்கள்.

யாழ்ப்பாணத்தார்கள் தமிழ்நாட்டின் கலைப் பண் பாட்டில் திளைத்தவர்கள் என்பதற்கு ஒரு நிச்சயமான அத்தாட்சி உண்டு. அது, அவர்களுக்கு நாதஸ்வர சங்கீதத்தில் உள்ள பிரேமைதான். அந்தப் பகுதியி லேயே பல நாதஸ்வர வித்வான்கள் இருக்கிறார்கள். ஆயினும் விசேஷ சந்தர்ப்பங்களுக்குத் தமிழ் நாட்டி

விருந்து புகழ்பெற்ற நாதஸ்வர வித்வான்களை அழைப்பது வழக்கம். ஆகையால் "தமிழ் விழாவுக்கு வேறு யார் வந்தாலும் வராவிட்டாலும் ஒரு நல்ல நாதஸ்வர வித்வானை 'ஒழுங்குசெய்து' அனுப்பி விடுங்கள்" என்று செய்தி மேல் செய்தி வந்து கொண்டிருந்தது.

இம்மாதிரி பொதுப் பணிகளில் ஆர்வத்துடன் முன் வந்து கலந்து கொள்ளும் இயல்பு படைத்த பாக்கியவான் குழிக்கரை பிச்சையப்பா அவர்கள். ஆகையால் அவரை ஒழுங்கு செய்வது மிக எளிதாய் இருந்தது. ஆனால் அவருக்குப் பாஸ்போர்ட்—விஸா ஒழுங்கு செய்தல் அவ்வளவு எளிதாயில்லை. இலங்கை அரசாங்கத்தார் இந்தியாவிலிருந்து வரும் கலைஞர்களுக்கு அநுமதி கொடுக்கும் விஷயத்தில் விசேஷகட்டுப்பாடுகளை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இது இலங்கையில் உள்ளவர் களுக்கே தெரிவதில்லை. ஆகையால் இங்கேயுள்ள சங்கீத வித்வான்களைக் கச்சேரிகளுக்கு ஒழுங்கு செய்து விட்டுப் போய் அங்கே பிரபலமாக விளம்பரமும் செய்து விடுகிறார்கள். வித்வானுக்கு இலங்கை சர்க்காரின் அநுமதி காலத்தில் கிட்டுவதில்லை. ஆகையால் இவர் அங்கே குறிப்பிட்ட தேதியில் போக முடிவதில்லை. வித்வானை எதிர்பார்த்த அபிமானிகள் பெரிதும் ஏமாற்றம் அடைகிறார்கள்.

குழிக்கரை பிச்சையப்பா அவர்கள் தமிழ்த் திருவிழா வுக்கு வரவேண்டு மென்பதில் இலங்கை சர்க்காரின் கல்வி மந்திரி உள்பட பல பிரமுகர்கள் சிரத்தை கொண்டிருந்தும், விழாவுக்கு முதல்நாள்தான் அவருக்கு

அநுமதி கிடைத்தது. ஆகவே முதல் நாள் இரவு நடுநிசிக்கு 'ஸ்பெஷல்' விமானத்தில் அவரும் அவருடைய கோஷ்டியாரும் யாழ்ப்பாணம் வந்து சேர்ந்தனர்.

இந்தச் செய்தி கிடைத்த பிறகுதான் விழா நிர்வாகிகளுக்கு நிம்மதி ஏற்பட்டது. பின்னரும் கவலைப் பட்டவர்கள் சிலர் உண்டு. "வித்வான்கள் வந்து விட்டார்கள், சரிதான்! அவர்களுடைய வாத்தியங்கள் வந்து சேர்ந்தனவா? அல்லது வழியில் சுங்க அதிகாரிகள் பிடித்து வைத்துக்கொண்டு விட்டார்களா?" என்று சிலர் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். "வாத்தியங்கள் வந்தது சரிதான். அவற்றுக்குள்ளே சங்கீதம் பத்திரமா யிருக்கிறதா அல்லது அதிகாரிகள் பிடுங்கி வைத்துக் கொண்டு விட்டார்களா?" என்று வேறு சிலர் கவலைப் பட்டார்கள்.

மறுநாள் சூரியோதயம் ஆனதும், எல்லாக் கவலை களும் தீர்ந்து விட்டன. ஸ்ரீ ஆறுமுகநாவலர் மடாலயத்தின் முன்னிலையில் பெருங் கூட்டம் கூடி யிருந்தது. தெய்வத் தமிழ் எழுதிய ஓலைச் சுவடிகளை யானை வாகனத்தின்மீது ஏற்றிக் கொண்டு ஊர்வலம் புறப்பட்டது. குழிக்கரை பிச்சையப்பா நாதஸ்வர வாத்தியத்தை எடுத்துக் கொண்டார். ஒத்து ஊதுகிறவர் ஊதினார்; தாளம் தட்டுகிறவர் தட்டினார்; தவுல் வித்வான் ஜாம்ஜாம் என்று முழக்கினார். ஸ்ரீபிச்சையப்பா அன்றைய தினம் பொழிந்த இசை வெள்ளம் இன்னமும் யாழ்ப்பாண வீதிகளில் ஓடிக்கொண்டிருக்கும் என்று நம்புகிறேன்.

இந்த ஊர்வலத்தின் போது தமிழ் நாட்டிலிருந்து வந்த பிரதிநிதி ஒருவருக்கும் யாழ்ப்பாணத்து அன்பர் ஒருவருக்கும் நடந்த சம்பாஷணையைக் கொஞ்சம் கேளுங்கள் :—

"ஏன் ஐயா இலங்கைத்தீவில் யானைகள் ஏராளமாக உண்டு என்று சொன்னார்களே ?"

"ஆமாம், இல்லை யென்று யாராவது சொன்னார்களா ?"

"அப்படியானால் இந்த ஊர்வலத்திற்கு ஒரு நிஜ யானையைக் கொண்டு வந்திருக்கக் கூடாதா ? இந்தப் பொம்மை யானைமேல் எதற்காக ஓலைச் சுவடிகளை வைத்து ஊர்வலம் விடுகிறீர்கள் !"

"நான் தங்களை ஒன்று கேட்கிறேன். பதில் சொல்வீர்களா ?"

"தாராளமாய்க் கேளுங்கள் !"

"உங்கள் நாட்டில், அதாவது எங்கள் தாய் நாட்டில் காளை மாடுகள் ஏராளமாக உண்டு அல்லவா ?"

"ஆமாம் ; உண்டு. அதிலும் பழைய கோட்டைப் பட்டக்காரரின் காங்கேயம் காளைகள் பிரசித்தி பெற்றவை."

"சரி ; அப்படியானால் உங்கள் நாட்டுச் சிவன் கோயில்களில் ரிஷப வாகன ஊர்வலம் என்றால், நிஜக் காளை மாட்டின்மீது சுவாமியை வைத்து ஏன் கொண்டு வருகிறதில்லை ? பொம்மை ரிஷப வாகனங்களின் மீது சுவாமியை வைத்து எழுந்தருளப் பண்ணுவது ஏன் ?"

சேய் நாட்டுக்காரரின் இக் கேள்விக்குத் தாய் நாட்டுக்காரர் விடை சொல்ல முடியாமல் கொட்டுக் கூடை முழி முழித்தார்.

நம்முடைய ஆலயங்கள், திருவிழாக்கள் எல்லா வற்றிலும் நம் பெரியோர்கள் அருங் கலைகளைச் சம்பந்தப் படுத்தி அமைத்து இருக்கிறார்கள். வாகனங்களின் அமைப்பும் கலை உலகத்தைச் சேர்ந்ததே அல்லவா? பிரசித்தமான கோயில் பிரகாரங்களில் வரிசையாக வைத்திருக்கும் ரிஷப வாகனம், யானை வாகனம், மயில் வாகனம், கருட வாகனம் ஆகியவை எவ்வளவு அருமையான காட்சி தருகின்றன? விநாயகருக்குரிய மூஞ்சூறு வாகனங்கூடக் கலையுடன் சேரும்போது எவ்வளவு நன்றா யிருக்கிறது.

ஆகவே, தமிழ்ச் சுவடிகளை யானை வாகனத்தின் மீது வைத்து ஊர்வலம் விடுவது என்ற யோசனையை நமது பூர்வீக கலைப் பாணியிலேயே யாழ்ப்பாணத்து அன்பர்கள் நடத்தி வைத்தார்கள். அதைப்பற்றி முதலில் குறைப்பட்ட தமிழ் நாட்டு அன்பர்களும் மேற்சொன்ன காரணத்தைக் கேட்டுத் திருப்தி அடைந்தார்கள்.

* * *

இந்த ஓலைச் சுவடி ஊர்வலத்தின்போது நடந்த இன்னொரு ரசமான சம்பவத்தைச் சொல்ல விரும்பு கிறேன்.

"பிச்சையப்பா கோஷ்டியார் வந்தது சரி; வாத்தி யங்களைக் கொண்டு வந்தார்களா?" என்று யாழ்ப்பாண நண்பர்கள் கவலையுடன் விசாரித்தார்கள் அல்லவா?

ஊர்வலம் பாதி தூரம் வந்தபோது மணி ஒன்பது ஆகிவிட்டது. ஸிலோன் ரேடியோக்காரர்கள் “ஒன்பது மணியிலிருந்து ஒலி பரப்புவதாக அறிவித்திருக்கிறோம். ஆகையால் நாதஸ்வர வித்வான்கள் உடனே பந்தலுக்கு வந்து வாசிக்க வேண்டும்” என்று வற்புறுத்தினார்கள். ஆகவே ஊர்வலத்தில் வாசிக்கும் பொறுப்பை இனி உள்ளூர் வித்வான்களுக்கு விட்டுவிட்டுப் பிச்சையப்பா கோஷ்டியார் பந்தலுக்குப் போவது என்று ஏற்பாடு ஆயிற்று. உள்ளூர் நாதஸ்வர கோஷ்டியாரும் வந்து நின்றார்கள். ஆனால் வாசிக்கத் தொடங்குவதாக இல்லை. மேலும் கீழும் பார்த்தார்கள். அக்கம் பக்கம் பார்த்தார்கள். மடியை உதறிப் பார்த்தார்கள். சட்டைப் பைகளைத் தடவிப் பார்த்தார்கள். “என்ன?” “என்ன?” என்று பலரும் ஒருவரையொருவர் வினவினார்கள். சிறிது நேரம் வரையில் விஷயம் மர்மமாகவே இருந்தது. வெளியூர் வித்வானைத் தருவித்ததில் உள்ளூர் வித்வான்களுக்கு ஒரு வேளை வருத்தமோ என்றுகூட நாங்கள் பயந்து போனோம். கடைசியில் உண்மை வெளியாயிற்று. தமிழ் விழாவின் கோலாகலத்தில் ஈடுபட்டு மெய்ம்மறந்து உள்ளூர் தவில் வித்வான் தவில் வாத்தியத்தை எங்கேயோ விட்டு விட்டார்! நல்ல வேளையாக பிச்சையப்பா கோஷ்டியில் இரண்டு தவில்கள் வந்து இருந்தன. அவற்றில் ஒன்றை வாங்கிக் கொடுத்த பிறகு உள்ளூர் கோஷ்டியார் ஜமாய்க்கத் தொடங்கினார்கள். பிச்சையப்பா கோஷ்டியார் பந்தலுக்குச் சென்றார்கள். யாழ்ப்பாணத் தமிழர்களின் தமிழ் அன்புக்கு இதைக் காட்டிலும் வேறு உதாரணம் வேண்டுமா?

வேண்டுமென்றால், நல்லது, பரமேசுவரக் கல்லூரி மைதானத்துக்கு வாருங்கள். வந்து அம் மைதானம் எப்படிக் கோலாகலமாய் இருக்கிறது என்று பாருங்கள். எப்படி மக்கள் வந்து நிறைந்து, இதற்குள்ளேயே பந்தலுக்குள் இடம் போதாமல் நெருக்கடி நேர்ந்து விட்டது என்பதைப் பாருங்சள். படை படைக்கும் வெய்யிலில் மக்கள் நிற்பதைப் பாருங்கள். மர நிழலில் நிற்பதையும், குடை நிழலில் நிற்பதையும் பாருங்கள்.

அவ்வளவையும் பார்த்தபிறகு தயவு செய்து மேடை மீதும் சிறிது கவனம் செலுத்தி வையுங்கள். அதைப் போன்ற அதிசயத்தை இலங்கையில் என்றுமே கண்டதில்லை என்று இலங்கை நண்பர்களே கூறினார்கள் என்றால், நாம் என்ன சொல்ல இருக்கிறது ? வெவ்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்களும், முற்றும் மாறு பட்ட அபிப்பிராயம் கொண்டவர்களும், ஒருவரை யொருவர் காரசாரமாகத் தாக்கிக் கொள்ளுகிறவர்களும் ஒரே மேடையில் சமுகம் அளித்தது நம் இலங்கை நண்பர்களுக்கு அவ்வளவு வியப்பை அளித்தது.

இலங்கை இந்திய காங்கிரஸின் தலைவர்களான ஸ்ரீ இராஜலிங்கமும் ஸ்ரீ தொண்டைமானும் அங்கு இருந்தார்கள். இவர்களால் சிங்கள மந்திரிகளைக் காட்டிலும் அதிக 'பொல்லாதவர்' என்று கருதப்படும் ஸர் கந்தையா வைத்தியநாதன் இருந்தார். சிங்கள சர்க்காரில் மந்திரி பதவி வகித்து ஒத்துழைக்கும் திரு. பொன்னம்பலமும் திரு. கனகரத்தினமும் அந்த மேடையில் இருந்தார்கள். சிங்கள சர்க்காருடன் மாறு பட்டு மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்த திரு. சுந்தர

லிங்கம் இருந்தார். தமிழரசுக் கட்சியின் பிரமுகரான திரு. வன்னிய சிங்கம் இருந்தார். இவர்கள் எல்லா ருடனும் ஒவ்வொரு அம்சத்தில் மாறுபட்ட திரு. எஸ். நடேசன் வரவேற்பு சபைத் தலைவராக வீற்றிருந்தார்.

தமிழ்த் தாயின் திருப்பணியில் இவ்வளவு பேரும் ஒன்று சேரக்கூடும் என்பதை நிரூபிக்கும் இந்த ஒரு அருமையான காட்சிக்காகவே இந்த விழாவை நடத்தி யிருக்கலாம் என்றும், முப்பதினாயிரம் ரூபாய் செலவு செய்திருக்கலாம் என்றும் இலங்கை நண்பர்கள் பேசிக் கொண்டதைக் கேட்டு எங்கள் செவிகள் குளிர்ந்தன.

தூய செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டு இலக்கண வழுவில்லாத வாக்கியங்களை அமைத்துத் திரு. எஸ். நடேசன் அவர்கள் நிகழ்த்திய வரவேற்புரை' அழகிய நன்முத்துக்களைக் கொண்டு யாத்துத் தமிழ் அன்னைக்குச் சூட்டிய ஆரமாக மிளிர்ந்தது.

தமிழ் விழாவைத் திறந்துவைத்த டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் மழலைத் தமிழில் பேசிச் சபையோரை மகிழ்வித்தார். பழைய காலத்தில் "உங்கள் உடம்பு இளைத்துப் போயிருக்கிறதே!" என்று கூறுவதை ஓர் உபசாரமாகக் கருதினார்கள். "எனக்கு உடம்பு துர்ப்பலம்" என்று கூறுவதையும் ஒரு பெருமையாக எண்ணினார்கள். அதுபோலவே தாய் மொழியில் பேசத் தெரியாது என்று சொல்வதும் பெருமையாகக் கருதப் பட்ட காலம் உண்டு. "எனக்குத் தமிழில் பேச வராது.

தமிழ்ப் புத்தகம் படிக்கிற வழக்கம் இல்லை" என்றெல்லாம் பெருமிதத்துடன் சொல்லிக்கொண்டார்கள். "இப்படியெல்லாம் ஒரு காலத்தில் நானும் பெருமைப்பட்டவன்தான். ஆனால் இன்றைக்கு 'who is who' என்று வெளியிடப்படும் தற்புகழ்ச்சிப் புத்தகங்களில் என்னுடைய விஞ்ஞானப் பதவிகளைப் பற்றிக் குறிப்பிடாவிட்டால் கவலைப்படமாட்டேன். 'கல்கத்தா பாரதி சங்கத்தின் ஸ்தாபகத் தலைவர்' என்றும் 'டில்லி தமிழ்ச் சங்கத்தின் தலைவர்' என்றும் போட்டுக் கொள்வதிலேயே அதிகப் பெருமை அடைகிறேன்" என்று டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் இதய அந்தரங்கத்திலிருந்து கூறிய மொழிகள் அனைவரையும் பரவசப் படுத்தி விட்டன.

தமிழ் விழாவை யொட்டி அமைந்திருந்த கலைக் காட்சியை ஸர். கந்தையா வைத்தியநாதன் திறந்து வைத்தார். தமிழரின் பூர்வீகப் பண்பாட்டின் சிறப்பையும், அதைப் போற்றிப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பையும் பற்றி நன்றாக எடுத்துச் சொன்னார். ஆனால் அவர் இப்பிரசங்கத்தையும் எழுதிப் படித்திராமல் முதல் நாள் செய்ததைப்போல் திடீரென்று தமிழில் பேசத் தொடங்கியிருந்தால் இன்னும் சிறப்பாய் இருந்திருக்கும் என்று இரண்டு பிரசங்கங்களையும் கேட்ட நண்பர்கள் கருதினார்கள்.

பிறகு, தலைவர் திரு. சி. ஆர். சீனிவாசன் தமக்கே உரியதான அலாதித் தமிழ் நடையில், சின்னஞ் சிறு வாக்கியங்களில், தமது தலைமைப் பிரசங்கத்தைச்

செய்தார். "தமிழில் சொல்ல முடியாத கருத்து ஒன்றுமே இல்லை. சொல்ல முடியவில்லை யென்றால் அது பேசுகிறவருடைய குறையே தவிர, தமிழின் குறைபாடு அன்று" என வற்புறுத்திக் கூறினர். அவ்விதம் அதிகார பூர்வமாகக் கூற அவருக்கு உரிமை உண்டு. உலகம் முழுவதிலும் வெளியாகும் நவநவமான உண்மைகளையும் கருத்துக்களையும் அவர் நடத்தும் "சுதேசமித்திரன்" தினப் பத்திரிகையில் வெளியிட்டுத் தானே வருகிறார்கள்? சொல்ல முடியாது என்று எதையும் விட்டு விடுவதில்லையே?

ஒரு குடியானவன், அவன் மனைவி, அவர்களுடைய மகள் மூன்று பேரும் முழுச் செவிடர்கள். குடியானவனும் அவன் மகளும் களத்தில் இருந்தார்கள். குடியானவன் மனைவி வீட்டிலிருந்து சோறு கொண்டு வந்தாள். குடியானவன் சாப்பிட ஆரம்பித்தான். அவனுடைய மாடு ஒன்று சற்றுத் தூரத்தில் வயலில் இறங்கியதைப் பார்த்தான். அந்த மாட்டை அதட்டுவதற்காக "இத்தா! இந்தா!" என்றான்.

அவன் உதடு அசைவதைப் பார்த்துவிட்டு அவன் மனைவி, "இன்றைக்கு நான் சமைக்கவில்லை; உன் அக்காதான் சமைத்தாள். அதனால்தான் குழம்பு நன்றாயில்லை!" என்று சொன்னாள்.

அவள் ஏதோ சொல்வதைப் பார்த்த குடியானவன். "அதெல்லாம் முடியாது! மயிலை மாட்டையும் சிவப்பு மாட்டையும் சேர்த்துத்தான் கொடுப்பேன். தனித் தனியாய் பிரித்து விற்க முடியாது!" என்றான்.

இவர்கள் இரண்டு பேரையும் கவனித்த அவர்களுடைய மகள், "மூத்த மாமன் மகனைக் கட்டிக்கச் சொன்னாலும் கட்டிக்கிறேன் ; இளைய மாமன் மகனைக் கட்டிக்கச் சொன்னாலும் கட்டிக்கிறேன். உங்கள் இஷ்டம் !" என்றாள்.

ஒருவர் சொன்னது இன்னொருவர் காதில் விழவில்லை ; அதனால் அவரவர்களுடைய மனதிற்குள்ளே என்ன எண்ணம் இருந்ததோ அதை வெளியிட்டார்கள்.

"வாழ்க்கையும் உளத் தத்துவமும்" என்ற பொருளைப்பற்றித் தமிழ் விழாவில் பேசிய பேராசிரியர் அருள்நந்தி மேற் கூறிய கதையைத் தமது அரிய சொற்பொழிவுக்கிடையே கூறினார். தாம் எடுத்துக்கொண்ட விஷயத்தின் ஓர் அம்சத்தை விளக்குவதற்காகவே கூறினார். மக்களின் மனதில் உள் மனம், வெளி மனம் என்ற இரண்டு பகுதிகள் உண்டு. குளிர்மிகுந்த துருவப் பிரதேசங்களில் கடலில் பனிக்கட்டி மலைகள் மிதந்து வரும். அவற்றில் வெளியில் தெரியும் பகுதி கொஞ்சம் ; நீருக்குள்ளே அமுங்கியுள்ள பகுதியே அதிகம். இம்மாதிரியே மனிதர்களின் பெரிய மனதைக் காட்டிலும் மறைந்திருக்கும் உள் மனமே பெரியது. சிற்சில சந்தர்ப்பங்களில் உள் மனத்தில் அமுங்கிக் கிடக்கும் எண்ணங்கள் வெளியாகும். சிற்சில மனோவியாதிகளைக் குணப்படுத்துவதற்கு அமுங்கிக் கிடக்கும் எண்ணங்களை வெளிப்படுத்துவது அவசியம்.

ஒரு குடும்பத்தின் தலைவன் முன்கோபக்காரனாகவும் கொடூரமுள்ளவனாயுமிருந்தால் அவன் வீட்டிலுள்ள பெண்டு பிள்ளைகள் தங்கள் எண்ணங்களை வெளியிடப்

டயந்து அமுக்கி வைத்துக் கொள்வார்கள். இதனால் அவர்கள் நாளடைவில் பெருந் தீங்குகளுக்கு உள்ளாவார்கள்.

சென்ற இரண்டு உலக மகா யுத்தங்களில் பிரஞ்சுக் காரர்களும் இத்தாலியர்களும் மிகவும் கஷ்டங்களுக்கு உள்ளானார்கள். எனினும் இங்கிலாந்திலேதான் அதிகம் பேருக்குப் பைத்தியம் பிடித்தது. இதைப்பற்றி ஆராய்ச்சி செய்தபோது ஒரு உண்மை வெளியாயிற்று. பிரஞ்சுக்காரர்களும் இத்தாலியர்களும் தங்கள் துயரங்களை வெளியிட்டுச்சொல்லிப் புலம்பி அழுவார்கள். ஆனால் ஆங்கிலேயர் தங்களுடைய திட சித்தத்தை நிரூபிப்பதற்காகத் துயரங்களை மனதிலேயே அடக்கிக் கொள்வார்கள்; வெளியே காட்ட மாட்டார்கள். அப்படிப் பலவந்தமாக அடக்கிக் கொண்ட காரணத்தினாலேயே ஆங்கிலேயரில் அதிகம்பேருக்குச் சித்தப்பிரமை உண்டாயிற்று என்று தெரிந்தது!

இப்படி அனைவரும் அறிந்துகொள்ளக்கூடிய எளிய உதாரணங்களைக் கூறிப் பேராசிரியர் அருள்நந்தி அவர்கள் சில அபூர்வமான மனோ தத்துவ உண்மைகளை விளக்கினார்கள்.

முதலில் கூறிய செவிடர்கள் கதையைப் பேராசிரியர் அருள்நந்தி கூறிச் சபையோரைக் குலுங்கச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தபோது முதல் நாள் தமிழ்த் திருவிழாவில் நடந்த ஒரு சம்பவம் என் உள் மனதிலிருந்து வெளியே வந்தது. திருவிழாவின் தலைவர் திரு. ஸி. ஆர். சீனிவாசன் தமது தலைமைப்

பிரசங்கத்தைப் படிக்கத் தொடங்கியபோது, திருவிழாப் பந்தலிலும் சுற்றுப் பக்கத்திலும் கூடியிருந்த பதினை யாயிரம் ஜனங்களும் திடீரென்று செவிடர்களாகி விட்டார்கள்! அதாவது ஒலி பெருக்கி வேலை செய்யாமல் நின்றுவிட்டது! அந்தச் சமயம் பார்த்து, யாரோ மின்சார நிலையத்தில் மின்சாரப் பரிசோதனைசெய்ய ஆரம்பிக்கவே இந்தக் கோளாறு நிகழ்ந்தது.

அப்போது உச்சிப் பகல் வேளை. மணி பன்னி ரண்டுக்கு மேல் ஆகிவிட்டது. அந்த வேளையில் வேறு இடங்களில் இம்மாதிரி கூட்டங்களில் என்ன நடக்கு மென்பதுபற்றி நேயர்கள் தங்கள் அநுபவங்களை ஞாபகப்படுத்திக்கொள்ளலாம். 'ஒலி பெருக்கி கேட்க வில்லை' என்று நாலாபுறத்திலிருந்தும் கூச்சல் கிளம்பும். பலர் எழுந்து நின்று அந்த விஷயத்தை அறிவிப்பார்கள். பலர் கூட்டத்தை விட்டுப்போக முயற்சிப்பார்கள். அவர்களைச் சிலர் தடுக்கப் பார்ப்பார்கள். பத்து நிமிஷம் அல்லோலகல்லோலமாயிருக்கும். இதற்குள் ஒலி பெருக்கி திரும்பி வராவிட்டால், கூட்டம் நிச்சயமாகக் கலைந்து போகும். மேடையில் உள்ள சிலர் மட்டும் மரியாதைக்கு உட்கார்ந்திருப்பார்கள். பிரசங்கம் செய் பவரும் நடு நடுவே நிறுத்திவிட்டு அங்குமிங்கும் பார்ப் பார். 'பிரசங்கத்தைப் படித்ததாகப் பாவித்துக் கொள்ளலாம்' என்று அவரும் பேச்சை நிறுத்தி விடுவார். சபையில் மிச்சமுள்ள மரியாதைக்காரர்கள் பெருமூச்சு விட்டுவிட்டு எழுந்து போவார்கள்.

யாழ்ப்பாணத் திருவிழாவில் என்ன நடந்தது என்று கேளுங்கள். ஒலிபெருக்கி நின்றதும், திரு

ஸி. ஆர். சீனிவாசன் ஒரே ஒரு தடவை திரும்பிப் பார்த்தார். ரேடியோ ஸிலோன் அதிகாரி "இதை நேராக ஒலி பரப்புகிறோம். ஆகையால் தயவு செய்து நிறுத்தாமல் படியுங்கள்!" என்றார். ஸ்ரீ சீனிவாசன் பிறகு நிறுத்தவுமில்லை; திரும்பி அப்பால் இப்பால் பார்க்கவும் இல்லை. அவர் பாட்டுக்குப் படித்துக் கொண்டே போனார். மெதுவாக நிறுத்தி நிதானமாகப் படித்தார். படித்து முடிக்க அரைமணி நேரம் ஆயிற்று. முடிக்கும் வரையில் ஒலிபெருக்கி வேலை செய்யவில்லை. ஆனால் ஒருவராவது சபையை விட்டு எழுந்திருக்க வில்லை; கூச்சல் போடவில்லை. திரு ஸி. ஆர். சீனி வாசன் தலைமைப் பிரசங்கம் முடிந்து, கல்வி மந்திரி கனம் கனகரத்தினத்தின் நன்றி உரைக்கும் இருந்து விட்டுத்தான் எழுந்தார்கள்!

தமிழ் விழாக்கள், கம்பர் விழாக்கள் முதலிய வைப வங்களுக்குத் தவறாமல் பிரசங்கமாகும் நண்பர்கள் சிலர் உண்டு. விழா நடைபெறும் போதும் விழா முடிந்து போகும் போதும் அவர்களுடைய சம்பாஷணை பின் வரும் தோரணையில் இருக்கும்:—

"திருவாரூர் தமிழ் விழாவில் இலைக்கு மாம்பழம் போட்டார்கள். காரைக்குடி கம்பர் விழாவில் பலாச் சுளை போட்டார்கள். இந்த விழாவில் இலையில் பழம் ஒன்றுமே போடவில்லை......"

"இந்த ஊரில் பழம் கிடைக்காது; போனால் போகட்டும். தென்னை அதிகம் இருக்கிறதே; தலைக்கு ஒரு இளநீராவது கொடுக்கக் கூடாதோ?"

"நீங்கள் பழத்துக்கும் இளநீருக்கும் போய் விட்டீர்கள். சமையலே மகா மட்டம். சாம்பார், ரஸம், பாயாசம்,—ஏதாவது ஒன்று நன்ருயிருக்க வேண்டுமே? வாயில் வைக்க முடியவில்லை......"

"அப்படி ஒரேயடியாய்க் குறை சொல்லி விடாதீர்கள். வாழைக்காய்ப்பொடித் துவையல் நன்ருகத்தானிருந்தது. இவ்வளவு பேருக்கும் மாங்காய் ஊறுகாய் வைத்திருந்து போட்டார்களே? அதைச் சொல்ல வேண்டாமா?......"

"சாப்பாடு முன் பின்னுக இருந்தாலும் கவனிப்பு நன்ருயிருந்தால் போதும். அதுவும் இங்கே இல்லை. கவனிப்பு, உபசரிப்பு ஒன்றும் போதாது. விசேஷ பிரதிநிதிகளுக்குச் சாப்பாடு எங்கே என்று நாம் விசாரித்துக்கொண்டு போக வேண்டியிருக்கிறது. நம்முடைய புலவர் பெருமணி காளமேகக் கவிராயரைத் தெரியும் அல்லவா? அவருக்குப் பிற்பகலில் சொற்பொழிவு இருந்தும், பகல் பன்னிரண்டு மணி வரையில் சாப்பாடு வரவில்லை! 'தமிழ் விழாவாம் தமிழ் விழா! இம்மாதிரி விழா யார் கொண்டாடச் சொன்ஞர்கள்!' என்று கவிராயர் அலுத்துக் கொண்டுவிட்டார்! நீங்கள் வேண்டுமாஞல் பாருங்கள்! அடுத்த ஆண்டு விழாவுக்கு அவர் வரமாட்டார்!..."

பேராசிரியர் அருள்நந்தி சொன்ன செவிடர் கதையைப்போல் இம்மாதிரி நண்பர்களின் உள் மனதில் உணவைப் பற்றிய கவலையே ததும்பிக் கொண்டிருக்கிறது. செவிக்குணவின் மகிமையைப் பற்றிய குறள் முதலியன எல்லாம் இவர்கள் வரைக்கும் செவிடர்

காதில் ஊதிய சங்கைப் போலத்தான்! ஆகையால், சம்பாஷணை மேற்கண்டவாறு அமைகிறது.

யாழ்ப்பாணத்துத் தமிழ் விழா அநுபவம் இதற்கு நேர்மாறாக இருந்தது. உச்சி வேளை பன்னிரண்டரை மணிக்கு, தலைவர் சொற்பொழிவு ஒரு வார்த்தைகூடக் காதில் விழாமல் ஒலிபெருக்கி தவறியிருந்தும், அந்தப் பதினையாயிரம்பேரும் அப்படியே அமைதியாக உட்கார்ந் திருந்தது அதிசயத்திலும் அதிசயமான நிகழ்ச்சியாகும். இது எப்படி சாத்தியமாயிற்று? அவ்வளவு பேருடைய உள் மனதிலும் தமிழ்த் தெய்வத்தினிடம் அளவில்லாத ஆழ்ந்த பக்தி குடிகொண்டிருந்திருக்க வேண்டும்! அந்த உறுதியான பக்திதான் அவர்களை அப்படி நிலைத்து உட்காரச் செய்திருந்தது. வயிற்றுக்குணவைப் பற்றிய நினைவுகூட அவர்களைக் கலைந்து போகச் செய்யவில்லை! "பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்" என்னும் மொழியும் அங்கே பொய்யாயிற்று. பசியினால் தமிழ்ப் பக்தியை வெல்ல முடியவில்லை. இந்தப் பக்தி மனப் பான்மை, விழா நடந்த மூன்று தினங்களிலும் நன்கு வெளியாகிக் கொண்டிருந்தன.

**கா**லையில் பதினையாயிரமாக இருந்த சபை அன்று மாலை இருபதினாயிரம் ஆயிற்று. மறுநாள் முப்பதினா யிரம் ஆயிற்று. மூன்றாம் நாள் மாலை ஏழு மணிக்குச் சபையில் அறுபதினாயிரம் மக்கள் கூடியிருந்தார்கள். அவர்களில் பலர் பிற்பகல் மூன்று மணிக்கு வந்து சபையில் உட்கார்ந்தவர்கள். பூமியில் வேர் ஊன்றிய வர்களைப்போல் இரவு பதினொரு மணி வரையில் உட்கார்ந்திருந்தார்கள். எவ்வளவுதான் சொற்

பொழிவுகள் நன்ருயிருக்கட்டுமே ? சங்கீதம் கேட்பதில் ஆசையிருக்கட்டுமே ? உள் மனதில் பக்தி வேர் ஊன்றி யிராவிட்டால், இது நடக்கக்கூடிய காரியமா ?

“அறுபதினுயிரம் பேர் என்று சொல்கிறீரே ? எண்ணிப் பார்த்தீரா ?” என்று கேட்கலாம். ஒரு முறையாக எண்ணித்தான் பார்த்தேன். ஐயாயிரம் பேர் தாராளமாக உட்காருவதற்கு இடம் கணக்கிட்டுப் பந்தல் போட்டிருந்தார்கள். நெருக்கமாக உட்கார்ந்தால் ஆருயிரம் பேர் கட்டாயம் உட்காரலாம். பரமேசுவரக் கல்லூரி மைதானத்தில் ஒரு சிறு பகுதியைத்தான் பந்தல் அடைத்தது. மூன்ரும் நாள் மாலை சுமார் ஏழு மணிக்கு மேடையில் நின்று பார்த்தேன். அந்த மைதானம் முழுவதும், — மோட்டார் வண்டிகள் நிறுத்தியிருந்த இடத்தைத் தவிர, —ஒரே ஜனத்திரள் மயமாகத் தெரிந்தது ! பந்தலில் இருந்த கூட்டத்தைப்போல் பத்து மடங்குக்கு அதிகம் இருக்கும்.

இதே முறையில் கணக்கிட்டு, அச் சபையில் அப்போது பெண்மணிகள் பத்தாயிரம் பேர் இருந் தார்கள் என்பதையும் அறிந்து கொள்ள முடிந்தது. பந்தலுக்குள்ளே ஆயிரம் பேரும் வெளியே ஒன்பதி ஞயிரம் பேரும் இருந்தார்கள். இதிலும் அதிசயம் என்னவென்ருல், அத்தகைய மாதர் பெருங்கூட்டத்தில் கைக் குழந்தைகளைக் காணேும். பிரசங்கத்துக்கோ கச்சேரிக்கோ தாய்மார்கள் போனுல் குழந்தைகளைக் கட்டாயம் எடுத்துப்போக வேண்டாமோ ! இது யாழ்ப் பாணத்துத் தாய்மார்களுக்குத் தெரியவில்லை. மாலை ஆறு மணி சுமாருக்கு ஒரே ஒரு குழந்தையின் கீச்சிடும் குரல்

மெல்லிதாகக் கேட்டது. எந்தப் பக்கமிருந்து வருகிறது என்று எளிதில் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் அந்தக் குழந்தையின் அன்னையே அதை வெளிப்படுத்தி விட்டார். அவர் என்ன செய்தார் தெரியுமோ? அழுத குழந்தையை அணைத்துக் கொண்டு எழுந்தார். ஏதோ செய்யத் தகாத பெருங் குற்றத்தைச் செய்து விட்டவர் போல் ஒரே ஓட்டம் பிடித்து ஓடி விட்டார்! அந்தப் பெண்மணியின் முன்னால் சென்று நமஸ்கரித்து, "அம்மா தங்கள் குழந்தையின் குரல் தமிழைவிட இனிமையா யிருக்கிறது. போக வேண்டாம், இருங்கள்!" என்று பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ள எண்ணினேன். அதற்குள் அந்தப் பெண்மணி மாயமாய் மறைந்து விட்டார்.

இவ்வளவு பண்பாடு நிறைந்த பெருந் திரளான மக்கள் கூடியிருந்த ஒரு மகா சபையை இதற்கு முன் எங்கும் நான் பார்த்ததில்லை. வேறு யாரும் பார்த்திருக்க முடியாது என்றும் சொல்வேன். யாழ்ப்பாணத்தார் நிச்சயமாகப் பார்த்ததில்லை. "இதற்கு முன்பும் பார்த்த தில்லை. இனிமேலும் பார்ப்போம் என்ற நம்பிக்கை எங்களுக்கு இல்லை" என்று ஈழத்து நண்பர்கள் பலரும் சொன்னார்கள்.

இவ்வளவு உயர்ந்த பண்பாட்டுக்கு இழுக்குத் தரும் குறைபாடு, ஒன்றும் தமிழ் விழாவின்போது வெளி யாயிற்று. அதை நான் சொல்லாமலிருக்க முடியாது. சொற்பொழிவாளர்களில் ஈழநாட்டைச் சேர்ந்த பெரும் புலவர்கள் பேசிய சமயங்களில் சபையில் ஒரு பகுதியார் பொறுமையின்மையை வெளிப் படுத்தினார்கள்; கை

தட்டிப் பேச்சை நிறுத்தும் முறையையும் கையாண்டார்கள். அவர்களுடைய மனோநிலையை அறிந்து கொள்வதில் கஷ்டம் ஒன்றும் இல்லை. "இந்த நாட்டுப் புலவர்களின் பேச்சுக்களை எப்போதும் நாம் கேட்கலாம். இவர்கள் தங்கள் பேச்சை நீட்டிக்கொண்டே போனால் கடல் கடந்து எவ்வளவோ சிரமத்தின்பேரில் வந்திருப்போரின் சொற்பொழிவுகளை எவ்வாறு கேட்பது?" என்று அவர்கள் எண்ணியது இயல்புதான். அதை அந்தமாதிரி பண்பாட்டுக்குக் குறைவான முறையில் வெளியிட்டிருக்கக் கூடாது. அந்தக் கடமையைச் சபைத் தலைவருக்கே விட்டிருக்க வேண்டும். எப்படியானாலும், அடிக்கடி சபையில் ஒரு பகுதியார் இம்முறையைக் கையாண்டது தமிழ் நாட்டிலிருந்து வந்திருந்தவர்களுக்கு வேதனையை அளித்தது.

பேராசிரியர் அருள்நந்தி ஒருவர்தான் மேற்கூறிய சோதனையிலிருந்து தப்பினார். அவர் ரஸமாகவும் பேசினார்; சுருக்கமாவும் பேசி முடித்தார். உளத் தத்துவ ஆசிரியர் அல்லவா? சபையோரின் வெளி மனம், உள் மனம் ஆகிய இரண்டின் தன்மையையும் அறிந்து அதற்கேற்பப் பேசினார். பொதுவாக, பெருந்திரளான மக்கள் கூடும் மகா சபைகளில் பேசுவோர் ஸ்ரீ அருள் நந்தியைப் பின்பற்ற வேண்டும்.

* * *

சபையோரின் நோக்கமறிந்து நடந்து கொள்ளும் ஆற்றல் இந்தத் தமிழ் விழாவில் மற்றொருவரிடம் நன்கு வெளியாயிற்று. அவர்தான் இலக்கிய மாநாட்டிற்குத்

தலைமை வகித்த பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள்.

"சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம் !"

என்று பாரதியார் பாடினர் அல்லவா ? தமிழ்நாட்டிலிருந்து ஈழ நாட்டுக்கு அமைத்த இலக்கியப் பாலத்திற்கு திரு. சேதுப் பிள்ளை அடிப்படையாகவும் மேல் தளமாகவும் பக்கப் பாதுகாப்பாகவும் விளங்கி அருமையான உதவி புரிந்தார். தம்முடைய தலைமை உரையில் ஈழ நாட்டுப் பெரியார்கள் தமிழுக்குப் புரிந்துள்ள தொண்டுகளைச் சிறப்பாக எடுத்துரைத்தார். இலக்கிய மாநாட்டில் ஒவ்வொருவரும் பேசிய பிறகு தலைவர் நகைச்சுவையுடனும் ரஸமான சிலேடைகளுடனும் சிறப்புரை கூறிச் சபையோரை மகிழ்வித்தார். இது காரணமாகவே, அதாவது தலைவரின் விரிவான விமரிசனத்தைக் கேட்பதற்காகவே, சபையோர் சொற்பொழிவாளர் சிலரை விரைவில் முடிக்கும்படி கோரினர்களோ என்று தோன்றும்படி அவருடைய மதிப்புரைகள் மிளிர்ந்தன.

இலக்கிய மாநாட்டில் முதலில் பேசியவர் பூஜ்யரான தனிநாயக சுவாமிகள். அவர்களுடைய சொற்பொழிவு தொடங்கும் நேரத்தில் திரு சேதுப்பிள்ளை வரக்கூடவில்லை. சில நிமிஷம் தாமதித்து வர நேரிட்டது. சுவாமிகளின் பேச்சுக்குத் திரு சேதுப்பிள்ளை கூறிய சிறப்புரையில், "இவர்களுடைய பெயரே தனிநாயகம் ! இவர்களுடைய பேச்சுக்கு ஒரு சபாநாயகம் எதற்கு ? அதனாலேயே நான் வருவதற்கு முன்பு தொடங்கி

விட்டார்கள் !" என்று கூறியதை யார்தான் அநுபவித்துச் சிரிக்காமலிருக்க முடியும் ?

இம்மாதிரியே ஒவ்வொரு இலக்கியப் பிரசங்கத்துக்குப் பிறகும் சொல்லின் செல்வரான திரு சேதுப் பிள்ளை அவர்கள் பொருத்தமாகவும் இனிமையாகவும் பேசி அந்த மகாசபையில் மணிக்கணக்காக அமர்ந்திருந்தவர்களுக்கு அலுப்பும் சலிப்பும் ஏற்படாதபடி செய்து வந்தார்.

ருஷியாவின் கடைசி ஜார் சக்கரவர்த்தியான அலெக்ஸாண்டரை அவருடைய முதன் மந்திரி ஒரு நாள் பேட்டி கண்டு பேச வந்தார். இராஜ்ய நிர்வாகத்தைப்பற்றி முதன் மந்திரி கூறியவற்றுக்கெல்லாம் ஜார் சக்கரவர்த்தி தலையை அசைத்து, "நீர் சொல்லுவது ரொம்ப சரி" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

முதன் மந்திரி போனபிறகு பிரதம சேனாதிபதி சக்கரவர்த்தியைப் பார்க்க வந்தார். முதன் மந்திரி கூறியவற்றுக்கு முற்றும் மாறுபட்ட அபிப்பிராயங்களைச் சேனாதிபதி கூறினார். அவருக்கும் அலெக்ஸாண்டர் தலையை ஆட்டி, "ஆமாம்; நீர் சொல்லுவது ரொம்ப சரி !" என்று கூறி வந்தார்.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள் அருகிலிருந்த அலெக்ஸாண்டரின் பத்தினியான ஜார் சக்கரவர்த்தினி. சேனாதிபதி போன பிறகு சக்கரவர்த்தினி தன் கணவரைப் பார்த்துக் கூறினாள்:—

"அலெக்ஸ்! முதன் மந்திரி கூறியவற்றுக்கெல்லாம் தாங்கள் தலையை அசைத்து, 'நீர் சொல்லுவது ரொம்ப சரி' என்று ஆமோதித்து வந்தீர்கள்."

"ஆமாம், என் கண்ணே!"

"பிறகு சேனாதிபதி வந்து முதன் மந்திரி கூறிய வற்றுக்கெல்லாம் மாறான கருத்துக்களைக் கூறினார்."

"ஆமாம், கண்மணி"

"சேனாதிபதி கூறிவற்றுக்கும் 'நீர் சொல்லுவது ரொம்ப சரி' என்று தாங்கள் ஒப்பம் வைத்து வந்தீர்கள்."

"ஆமாம், என் பிரிய சகி!"

"இப்படி முற்றும் மாறான அபிப்பிராயங்களைக் கூறிய இருவருக்கும் 'நீர் சொல்வது ரொம்ப சரி' என்று தாங்கள் தலையை ஆட்டி வந்தது எனக்குப் பிடிக்கவில்லை."

"என் கண்மணி! **நீ சொல்லுவது ரொம்ப சரி!**" என்றார் அலெக்ஸாண்டர்.

சென்ற இதழ்களில் நான் எழுதியவற்றிலிருந்து இலங்கைத் தமிழன்பர்கள் மேற்கூறிய ஜார் சக்கர வர்த்தியை ஒத்தவர்கள் என்ற எண்ணம் யாருக்காவது ஏற்பட்டிருந்தால் அந்த எண்ணம் **ரொம்பத் தவறு** என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். விஷ யங்களை அலசி ஆராய்ந்து உண்மையைத் தெளிவதில் இலங்கையிலுள்ள தமிழன்பர்கள் தமிழ் நாட்டாரைவிட ஒரு படி உயர்ந்தவர்கள். யார் சொல்லுவதையும் "**ரொம்ப சரி**" என்று உடனே ஒப்புக்கொண்டு விட மாட்டார்கள். இந்த நாலாவது தமிழ் விழா நடப் பதற்குச் சில காலத்திற்கு முன்னாலிருந்து இலங்கைப்

பத்திரிகை ஒன்றில் பலமான எதிர்ப் பிரசாரம் நடந்து வந்தது. எழுதியவர்கள் பேனுவைத் தீட்டிக்கொண்டு சக்கைப்போடு போட்டார்கள். டாக்டர் மு. வரத ராஜனுர், திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் முதலிய தமிழகத்துப் பெரும் புலவர்களையும் வெளுத்துக் கட்டி னுர்கள். 'அம்மாமித் தமிழ்' எழுதும் புது எழுத் தாளர்களையும் பிய்த்து வாங்கினுர்கள். ஒரு "கல்கி" இதழில் கண்ட ஆங்கில வார்த்தைகளைப் பொறுக்கி எடுத்து அவர்கள் வெளியிட்டிருந்த ஜாபிதாவைப் படித்ததும் எனக்கு மூர்ச்சை போட்டு விழவேண்டும் போலாகி விட்டது.

"இப்படிப்பட்டவர்கள்தாஞ தமிழை வளர்த்து விடப் போகிருர்கள்?" என்று எடுத்துக் காட்டித் தமிழ் விழாவுக்குத் தீவிர எதிர்ப் பிரசாரம் நடத்தப்பட் டிருந்தும், திருவிழா அவ்வளவு அமோகமாக நடந்தது தான் அதிசயத்திலும் அதிசயமாகும்.

நேயர்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய இன்ஞெரு தப்பபிப்பிராயத்தையும் போக்கிவிட விரும்புகிறேன். 'ஈழநாட்டுத் தமிழர்கள் தங்கள் நாட்டுப் புலவர்களை நன்கு மதிப்பதில்லை போலும்' என்று யாரும் எண்ண வேண்டாம். தங்கள் நாட்டுப் புலவர்களை அவர்கள் பெரிதும் மதித்துப் போற்றுகிருர்கள். தமிழ் நாட்டி லுள்ள நாம் அவர்களை நன்கு மதித்துப் பாராட்டுவ தில்லை என்ற மனக்குறையும் பலருக்கு உண்டு. இந்தச் குறையை ஓரளவு தீர்க்கும்படியான சிறப்பு நிகழ்ச்சி ஒன்று மூன்ரும் நாள் திருவிழாவில் நடைபெற்றது.

புதிய துறைகளில் தமிழில் அந்தந்த ஆண்டு வெளியான நூல்களில் சிறந்ததற்குப் பரிசு வழங்குவது தமிழ் விழாவில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி. இந்த ஆண்டில் பரிசு பெற்ற இரு பெண்மணிகள்,—ஸ்ரீமதி ராஜேசுவரி அம்மையாரும், டாக்டர் திரிபுரசுந்தரி அவர்களும்,—யாழ்ப்பாணம் வந்து விழாவைச் சிறப்பித்தார்கள். இவர்களுக்குத் திரு. அவிநாசிலிங்கம் செட்டியார் பரிசு வழங்கிய பிறகு, ஈழத்தில் தற்போது வாழும் தமிழ்ப் புலவர்களில் தலைசிறந்தவரான மகா வித்வான் திரு. சி. கணேசய்யர் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கும் நிகழ்ச்சி நடந்தது. அச்சமயம் சபைத் தலைமை வகித்த டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் மகா வித்துவானுக்குப் பொன்னாடை போர்த்தியபோது சபையில் ஆடவர்—பெண்டிர் அனைவருடைய முகங்களிலும் பெருமிதமும் எக்களிப்பும் தாண்டவமாடின.

தமிழகத்திலிருந்து விழாவுக்கு வந்தவர்களில் டாக்டர் மு. வரதராஜனார், பேராசிரியர் அ. சீனிவாசராகவன், திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், பேராசிரியர் அனந்த வைத்தியநாதன், திருமதி ராஜேசுவரி அம்மையார், பேராசிரியர் டி. என். சேஷாத்ரி ஆகியவர்கள் புலமையும் ஆராய்ச்சியும் ததும்பிய பிரசங்கங்களைச் செய்தார்கள். திரு ம. பொ. சிவஞான கிராமணியார் 'சிலம்பு கூறும் செய்திகளை' மத்திய இலங்கையிலுள்ள ஏழு லட்சம் இந்தியத் தொழிலாளிகளின் காதிலும் விழும்படியான இடி முழக்கக் குரலில் கூறி வீர கர்ஜனை புரிந்தார். டாக்டர் ராஜம்மாள் தேவதாஸ் உணவைக் குறித்து ருசிகரமான பிரசங்கம் செய்தார்.

மட்டக்களப்பு வித்வான் பெரியதம்பிப்பிள்ளை அவர்கள் கம்பன் நாட்டிய தமிழ் நாகரிகத்தை நன்கு எடுத்துக்காட்டினார். வட்டுக்கோட்டை முதுதமிழ்ப் புலவர் நல்லதம்பி அவர்கள் "கண்ணீர் பெருக்கிய கலித்தொகை"யைப் பற்றிப் பேசினார். (இலங்கைத் தமிழன்பர்களைக் கண்ணீர் பெருகும்படி செய்துவிட்டு இம்முது புலவர் சென்ற வாரத்தில்காலமான செய்தியை அறிந்து துயரமடைந்தேன்.) பண்டித மணி சி. கணபதிப் பிள்ளை அவர்கள் பழந்தமிழ்ப்பண்பில் திளைத்தவர்; புதுமையை ரஸிப்பவர். நகைச் சுவையும் சிலேடையும் ஆராய்ச்சி அறிவும் ததும்பக் குதித்துக் குதித்து எக்களிப்போடு பேசினார்.

"சொல்லக் கேளம்மா—குறி
சொல்லக் கேளம்மா!
மல்லிகைப் பூங்குழலாளே
சொல்லக் கேளம்மா!"

என்று அவர் ஆர்வம் பொங்கிய குரலில் பாடியபோது, உடல்நல மின்மையால் தமிழ் விழாவுக்கு வர முடியாமற் போன ரஸிகமணி டி. கே. சி. அவர்களே வந்து விட்டாரோ என்று பிரமிக்க நேர்ந்தது.

திருமதி மகேஸ்வரி, வித்வான் வேந்தனார், ஆசிரியர் எஸ். எம். கமால்தீன் ஆகியவர்கள் அறிவாராய்ச்சி ததும்பிய சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

வேதாரண்யம் சர்தார் ஏ. வேதரத்தினம் அவர்களும், ஈழநாடு காந்திஜிக்கு அர்ப்பணம் செய்த அருந்தொண்டர் திரு அரியநாயகம் அவர்களும் தமிழ்த் திருவிழாவில் காந்தி மகாத்மாவின் கொடியை நிலை

நாட்டினார்கள். சர்வோதயக் கொள்கையைச் சபையோருக்கு நினைவூட்டினார்கள்.

* * *

ஒவ்வொரு தமிழ் விழாவிலும் கலைக்காட்சியும் கலை நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய்வது வழக்கந்தான். ஆனால் யாழ்ப்பாணத் திருவிழாவில் ஏற்பாடு செய்திருந்த கலைக்காட்சியைப்போல் இதற்கு முன் நடந்த எந்த விழாவிலும் நடந்ததில்லை. பல பகுதிகளாகப் பிரிக்கப் பட்டிருந்த கலைக்காட்சியின் முதற்பகுதி பிரபஞ்ச உற்பத்தியிலிருந்து ஆரம்பமாயிற்று! மனித குலம் குழந்தைப் பருவத்திலிருந்த நாளிலிருந்து, உலகமெங்கும் கலையும் நாகரிகமும் எம்முறையில் வளர்ந்து வந்திருக்கின்றன என்பதைப் படிப்படியாகக் காட்டிக்கொண்டு சென்றார்கள். பாரத நாட்டில் ஹிந்து சமய மகோந்நதத்திலும் புத்த மதத்தின் ஆதிக்யத்திலும் கலை வளர்ந்த வரலாற்றைக் காட்டினார்கள். பிறகு தமிழ்நாட்டுக்கு வந்தார்கள். தமிழகத்தில் பல்லவர் காலத்திலும் சோழர் காலத்திலும் பிற்கால விஜயநகர மன்னர்கள் நாட்களிலும் நமது ஆலயங்கள், சிற்பங்கள், சித்திரங்கள் எப்படி எப்படியெல்லாம் இருந்தன, எப்படியெல்லாம் வளர்ந்தன என்பவற்றைக் கண்முன் நிறுத்தினார்கள்.

தமிழ் நாட்டுக்கும் ஈழ நாட்டுக்கும் கலைப்பாலம் அமைத்து, இரண்டு நாடுகளுக்கும் நெடுநாளாக நிலைத்துள்ள கலாசாரத் தொடர்பை நன்கு எடுத்துக் காட்டினார்கள். இவற்றையெல்லாம் காட்டுவதற்குப் புகைப்படங்கள், ஓவியங்கள், புள்ளி விவரங்கள், சிற்ப

வடிவங்கள், சிலாசாஸனங்கள் ஆகிய இவ்வளவு சாதனங்களும் துணை செய்தன.

விழாவுக்கு முதல் நாள் மாலை பரமேஸ்வரக் கல்லூரி மேல் மாடியில் ஏறிப்பார்த்தேன். வெறிச் சென்று காலியாக இருந்தது. இரவுக்கிரவே ஒரு மகத்தான கலை உலகம் விசுவாமித்திர சிருஷ்டியைப்போல் அங்கே உண்டாகிவிட்டது. மறுநாள் போய்ப் பார்த்தால் 'கண்ணன் திருவாயிலே ஏழு உலகத்தையும் கண்ட தாயைப்போல்' பிரமிக்க வேண்டியதாயிருந்தது. இந்தக் கலைக் காட்சி அற்புதத்துக்கு முக்கிய காரணமாயிருந்தவர் திருக்கேதீசுவரம் திருப்பணிக்காக இலங்கை போந்திருக்கும் ஸ்ரீ வி. எம். நரசிம்மன் (பி. ஏ., பி. இ; ஏ. எம். ஐ. சி.) என்று அறிந்தபின், அற்புதம் எனக்கு அவ்வளவு அற்புதமாகத் தோன்றவில்லை. அவரிடம் எதிர்பார்க்கக் கூடியதுதான்! தமிழ்த் திருநாள் நிர்வாக சபை சார்பாக அவருக்கு உதவி புரிந்தவர் திரு எஸ். ஆர். கனகசபை என்று அறிந்து மகிழ்ந்தேன். இவர்களுக்கும் இவர்களுக்குத் துணை புரிந்த ஸ்ரீ திருமலாச்சாரி முதலியவர்களுக்கும் கலைக் காட்சியைப் பார்த்துப் பயன் அடைந்த சுமார் ஒரு லட்சம் மக்களின் சார்பாக மனமார்ந்த நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இச்சமயத்தில், திருவிழாவின் பெரு வெற்றிக்குக் காரணமாயிருந்த இன்னும் சில நிர்வாக ஊழியர்களின் பெயர்களையும் குறிப்பிட விரும்புகிறேன். யாழ்ப்பாணப் பிரதேசத்தை வளமுள்ள பூமி என்று சொல்ல முடியாது. ஈழ நாடே இப்போது பற்றுக்குறை நாடு தான். அப்படியிருக்க, இந்தியாவிலிருந்தும் இலங்

கையின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்த ஆயிரக் கணக்கானவர்களுக்கு நாலு தினங்கள் உணவு அளிப்ப தென்பது எவ்வளவு சிரம சாத்தியமான காரியம்? விழாவுக்கு உணவுப் பண்டங்கள் சேகரிப்பதில் பேருதவி புரிந்தவர்கள் மட்டக்களப்புத் தமிழன்பர்கள். அவர்கள் மூட்டை மூட்டையாக அரிசியும், பானை பானையாகத் தயிரும், கூடை கூடையாகக் கறிகாய்களும் அனுப்பி வைத்தார்களாம். ஆயினும் கிடைத்த சாமான்கள் சரிவரப் பயன்பட வேண்டும் அல்லவா? இந்த அரிய கைங்கரியத்தை மேற்பார்வை செய்து திறம்பட நடத்தியவர் ஆசிரியர் இராஜசேகரன் அவர்கள். போக்குவரவுசாதனங்களை ஒழுங்கு செய்தவர் திரு. ஏ. அருளம்பலம் அவர்கள். தொண்டர் படைக்குத் தலைமை வகித்தவர் ஆசிரியர் என். தம்பி ரத்தினம் அவர்கள். காரியாலயத்தில் அமர்ந்து கேட் பவர்களுக்கெல்லாம் பொறுமையுடன் பதில் சொல்லிச் சகல காரியாதிகளையும் நிர்வகித்தவர் ஆசிரியர் டி. சீனி வாசகம் அவர்கள். பந்தல் ஒழுங்குகளை மேற்பார்வை செய்தவர்கள் ஆசிரியர் கணபதிப்பிள்ளை அவர்களும் ஆசிரியர் குமாரசாமிப்பிள்ளை அவர்களும். தண்ணீர்ப் பந்தல் கைங்கர்யத்தை நடத்தி வைத்தவர் ஆசிரியர் கந்தையா அவர்கள்.

இப்படி 'ஆசிரியர்' 'ஆசிரியர்' என்று வருவதை குறித்து நம் நேயர்கள் வியப்படைய வேண்டியதில்லை. தமிழ் விழாவை நிர்வகித்து நடத்தியவர்கள் பெரும் பாலும் ஆசிரியர்கள்தான். பருத்தித் துறையில் நான் பார்த்திருந்த ஆசிரியர் ஒருவர் விழாப் பந்தலை யொட்டிய

இடத்தைத் துப்புரவு செய்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். "தாங்கள் ஆசிரியர் ஏரம்பமூர்த்தி தானே" என்றேன்.

"ஆம், ஐயா!" என்ருர். "ஆசிரியத் தொழிலையே இங்கும் செய்கிறீர்கள்! கூட்டிப் பெருக்குகிறீர்கள்! விளக்குமாற்ருலும் விளக்குகிறீர்கள்!" என்றேன். "சிலேடை நோய் உங்களையும் பற்றிக்கொண்டு விட்டதா?" என்ருர் ஏரம்பமூர்த்தி. "எல்லாம் யாழ்ப்பாணத்துக் காற்றின் மகிமை; தமிழ் விழாவின் மகிமை!" என்றேன். பக்கத்தில் சுகாதார பரிசோதகர் திரு. நடேசன் நின்று கொண்டிருந்தார். நெருங்கி வந்து "யாருக்கு நோய்?" என்று கேட்டார். சென்ற முறை நான் யாழ்ப்பாணம் சென்றிருந்தபோது இவர் 'காக்கி' வர்ண உடுப்புத் தரித்திருந்தார். இப்போது தூய வெள்ளை உடுப்புக்களுடன் விளங்கினர். "என்ன, ஐயா வர்ணம் மாறியிருக்கிறீரே?" என்றேன். "நீங்கள் 'கல்கி'யில் என்னைப் பிடித்து வெளுத்துப் போட்டீர்கள் அல்லவா? அதனல் வெள்ளையாகி விட்டேன்!" என்று அவரும் சிலேடையில் புகுந்தார்! (எல்லாம் தமிழ்த் திருவிழாவின் மகிமைதான்!) இவ்வளவு மாபெருங் கூட்டம் கூடியும் அந்தப் பரமேசுவரக் கல்லூரி மைதானம் துப்புரவா யிருக்கும்படி பார்த்துக்கொண்ட சுகாதார அதிகாரி களுக்கு அவசியம் நன்றி செலுத்தியே தீரவேண்டும்.

இந்த நன்றி கூறும் படலத்தை இங்கே எதற்காக ஒப்புவிக்கிறேன் என்று நேயர்களுக்குச் சிறிது வியப்பா யிருக்கலாம். தமிழ்த் திருவிழாவின் முடிவில் "நன்றி கூறல்" என்னும் திருப்பணி எனக்கு அளிக்கப்பட்

டிருந்தது. அந்தக் கடமையை நிறைவேற்றுவதற்காக மேற் கூறியவாறுதொண்டு செய்தவர்களின் பெயர்களை யெல்லாம் சேகரித்து வைத்திருந்தேன். அவ்வளவும் வியர்த்தமாகி விட்டன ! "இதற்கு அடுத்த நிகழ்ச்சி இசைக் கச்சேரி" என்று சொன்னதுதான் தாமதம் ; அக்ஷரேகையைத் தாண்டும் படலம் ஆரம்பமாகி விட்டது ! கொரியாவிலே 38–வது அட்சரேகை ஒன்றை மட்டும் தாண்டினார்கள் ; அதனாலேயே எவ்வளவோ விபரீதங்கள் ஏற்பட்டு விட்டன. இங்கேயோ 38, 39, 40–எல்லா அட்சரேகைகளும் தவிடு பொடியாகிவிட்டன! "இசைக் கச்சேரி" என்று செவியில் விழுந்ததும், அந்த மகா சபையில் ஒரு மூலையில் நின்றவர்களில் சிலர் கொஞ்சம் நெருங்கி வரத் தொடங்கினார்கள். அதைப் பார்த்துவிட்டு இன்னொரு மூலையில் இருந்தவர்களும் கொஞ்சம் நெருங்கிவரப் பார்த்தார்கள். என்ன விசேஷம் என்று பார்ப்பதற்காகச் சிலர் எழுந்து நின்றார்கள். அதனால் ஏற்பட்ட இடைவெளியில் சிலர் புகுந்தார்கள். இப்படி நாலா பக்கங்களிலும் அக்ஷ ரேகைக் கயிறுகளைத் தாண்ட ஆரம்பித்துவிட்டார்கள் ! எனவே, போலீஸ் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டிய கட்டம் வந்து விட்டது !

திருவிழாவில் ஒலி பெருக்கிகள் எவ்வளவோ நன்றாக ஒழுங்கு செய்திருந்த போதிலும், அவ்வளவு பெரிய ஜனத் திரளுக்குப் போதியவாறு செய்யப்பட வில்லை. என்ன இருந்தாலும் சொற்பொழிவு சொற் பொழிவுதான் ; இசைப் பொழிவு இசைப் பொழிவு தான். நெருங்கி வந்து இன்னிசைக் கச்சேரி கேட்க

ஜனங்கள் விரும்புவதும் இயல்புதான். ஆனால், அக்ஷ ரேகையைத் தாண்டும் படலத்துக்கு இடங் கொடுத்து விட்டால் பெரிய விபரீதமாகி விடலாம். "தமிழ்த் திருவிழா குழப்பத்தில் முடிந்தது" என்று பத்திரிகை களில் பிரசுரிக்க நேரிடலாம். அப்படிப்பட்ட நெருக்கடி யான கட்டத்தில் போலீஸார் கூட்டத்தில் புகுந்து ஒத்துழைக்கத் தொடங்கினர்கள்; அவர்களுடைய கைத் தடிகளும் ஒத்துழைத்தன. எப்படியெனில், அத்தடிகள் யாருடனும் வலுச் சண்டைக்குப் போகவில்லை; மரியாதையாகக் கும்பிட்டு மக்களை அமைதியாக உட்காரும்படி வேண்டிக் கொண்டன! எல்லாம் தமிழ் விழாவின் மகிமைதான்.

ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரியின் இசைக் கச்சேரியில் முதல் அரைமணிநேரம் வரையில், அக்ஷ ரேகையைத் தாண்டலும் போலீஸ் நடவடிக்கையுமாகச் சிறிது குழப்பமாயிருந்து வந்தது. பின்னர், அமைதி ஏற்பட்டது. காம்போதிராக ஆலாபனத்தின்போது எள்ளுப் போட்டால் அதன் ஓசை கேட்கும்; அவ்வளவு நிசப்தம் நிலவியது. ।।தினுயிரம் பெண்மணிகள் மௌனமாயிருந்தார்கள். ஒரு குழந்தையின் 'கிறீச்' சத்தமும் கிடையாது. சங்கீதத்தைச் சபையோர் ரஸிப் பதற்கு அறிகுறியான கரகோஷம் மட்டும் அவ்வப்போது எழுந்தது. காம்போதி ஆலாபனத்தில் ஸ்ரீமதி வஸந்த குமாரி பொழிந்த பிர்க்காக்களை ரஸித்தார்கள்; 'காணக் கண்கோடி' கீர்த்தனத்தின் பாவத்தை ரஸித்தார்கள்; ஸ்வரப் பிரஸ்தாரத்தின் விருவிருப்பையும் ரஸித்தார்கள். கச்சேரியின் பிற்பகுதியில் பாடிய திரை கீதங்களும்

“சின்னஞ் சிறு கிளியே” “தங்கமே தங்கம்” என்னும் பாரதியார் பாடல்களும் வெகுவாக ரஸிக்கப்பட்டன. வரவேற்பு சபைத் தலைவர் திரு. எஸ். நடேசபிள்ளை அவர்கள் “திருவிழாக் கோலாகலத்தில் வித்வான் களுக்குப் பூமாலை வாங்கி வைக்க மறந்து விட்டபடியால் புகழ்மாலை சூட்டுகிறோம்!” என்று கூறி ஸ்ரீமதி வஸந்த குமாரியையும், பக்க வாத்திய வித்வான்களாகிய ஸ்ரீ கோபால கிருஷ்ணன், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ராவ், ஸ்ரீ வில்வாத்ரி ஐயர் ஆகியவர்களையும் சிறப்பாகப் பாராட்டினார். “வாழிய செந்தமிழ்” கீதத்துடன் கச்சேரி முடிந்தது. தமிழ்த் திருவிழாவும் அத்துடன் இனிது முடிவடைந்தது.

“ஆம்; விழா முடிந்தது! நல்லவேளையாக முடிந்தது!” என்று என்னால் சந்தோஷப்பட முடிய வில்லை. முடிந்து விட்டதே என்று வருத்தமாகத்தான் இருந்தது. ஸ்ரீ பெரியசாமித் தூரனும் நானும் விழாவுக்கு எல்லாரிலும் முதலில் வந்தோம். எல்லாருக்கும் கடைசி யில் கிளம்பினோம். ஆயினும்;விடை பெறுதல் எளிதாக இல்லை. வெளியூர்களிலிருந்து குடும்பத்தோடு வந் திருந்தவர்கள் சுமார் இருநூறு பேர் ராமநாதன் கலாசாலையில் தங்கி யிருந்தார்கள். தூத்துக்குடியிலிருந்து வந்திருந்த அறிஞர் ஸ்ரீ பால் நாடாரும் அவர் குடும்பத் தினரும் அங்கே தங்கி யிருந்தார்கள். கோயமுத்தூரி லிருந்து வந்திருந்த ஸ்ரீ சுந்தரம் பிள்ளையின் குடும்பத்தார் அங்கே இருந்தார்கள். கொழும்பிலிருந்து வந்திருந்த ஸ்ரீ ஆர். ஏ. நடேசன் குடும்பத்தார் அங்கேதான் இருந் தார்கள். அவர்கள் எல்லாரும் புறப்பட்டு விட்டார்கள்.

இப்படிக் குடும்பமாக வந்திருந்த விருந்தாளிகள் இருநூறு பேரையும் கவனித்துக்கொண்டு, அவர்களுக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் செய்து கொடுப்பதில் கண்ணும் கருத்துமா யிருந்தவர்கள், ராமநாதன் கலாசாலையின் தலைமை ஆசிரியை ஸ்ரீமதி பிள்ளையும், அவருடைய கணவர் ஸ்ரீமான் பிள்ளையும், கலாசாலை மாணுக்கியர் சிலரும் ஆவர். இவர்களும் புறப்பட்டுப் போய் விட்டார்கள். நாங்கள் மட்டுமே மிஞ்சி யிருந் தோம். லேடி ராமநாதன் அவர்களிடம் விடை பெருமல் எவ்வாறு புறப்படுவது? லேடி ராமநாதன் அவர்களிடம் விடை பெற்றுக்கொள்வதுதான் எப்படி?—எண்பது பிராயம் ஆன அந்தப் பெருமூதாட்டியார் காலை ஊன்றி நடக்கும் சக்தியை இழந்திருந்தார். ஆனுலும் இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு, சில சமயம் சக்கரம் வைத்த நாற்காலியில் வளைய வந்து கொண்டு, எப்படி யெல்லாம் காரிய நிர்வாகம் செய்தார்? அயலூர்களி லிருந்து வந்திருந்தவர்களை எப்படி யெல்லாம் கவனித்தார்? அவர்களுக்கு வேண்டிய வசதிகள் எல்லாம் செய்யப்படுகின்றனவா என்பதை எவ்வளவு ஊக்கத்துடன் மேற்பார்வை செய்தார்? வெள்ளைக் கலை யுடுத்திவெள்ளைப்பணி பூண்டு தமிழ்த் தாயே அங்கு லேடி ராமநாதன் வடிவில் எழுந்தருளி யிருந்ததாக எங்களுக்குத் தோன்றியது! அவரிடம் விடைபெறுதல் எங்ஙனம்?

லேடி ராமநாதன் அவர்களுடைய செல்வக் குமாரி யான ஸ்ரீமதி சிவகாமசுந்தரி (ஸ்ரீ எஸ். நடேச பிள்ளையின் மனைவியார்) மேனுடு—கீழ்நாடுகளின் கலாச்சாரப் பண்பாடுகளுக்கு ஒரு சிறந்த பிரதிநிதியாக

விளங்கினர். கணவருடன் விமான நிலையத்துக்குச் சென்று விழாத் தலைவர் முதலிய விருந்தாளிகளை வரவேற்றுக்கொண்டு வந்தார். பின் ஒவ்வொரு நிமிடமும் அவர்களுக்கு என்னதேவையென்று விசாரித்து உபசரிப்பதில் ஈடுபட்டிருந்தார். விருந்தாளிகளுக்கு விடை கொடுத்து அனுப்பத் தம் கணவருடன் விமான நிலயத்துக்கும் சென்றார்.

வரும் ஆண்டுகளில் தமிழ்த் திருவிழா நடக்கலாம்; சிறப்பாகவும் நடைபெறலாம். ஆனால் இத்தகைய தலைசிறந்த தமிழ்ப் பண்பாட்டை வேறு எங்கே காணப் போகிறோம்?

ஆகவே, "புறப்படட்டுமா?" "புறப்பட்டே விடட்டுமா?" என்று கேட்டுக்கொண்டு காலங் கடத்தினோம். ஆகாய விமானம் நாம் இன்றியே ஒரு வேளை புறப்பட்டுப் போய் விட்டால் இன்னும் ஒரு நாள் யாழ்ப்பாணத்தின் தமிழ்க் காற்றை அநுபவிக் கலாமே என்றுதான்! ஆனால் அந்த விமானத்துக்கும் அதே எண்ணம் அன்றைக்குத் தோன்றி விட்டது! கொழும்புக்கு அருகில் புயல் அடிக்கிறது என்ற காரணத்தினால் இரண்டு மணி நேரம் தாமதித்து விமானம் புறப்பட்டது. அந்த இரண்டு மணி நேரமும் எங்களுக்குக் கிடைத்த லாபம் என்றே தோன்றியது. யாழ்ப்பாணத்து நண்பர்களுடன் விமான நிலயத்தில் தமிழ் விழாவின் சிறப்புக்களைப் பற்றிப் பேசிக் கொண் டிருக்க முடிந்ததல்லவா? பேச்சின் இடையில் அவர். களுக்கு எச்சரிக்கையும் செய்து வைத்தேன். "இது வரையில் எல்லாம் குதூகலமாகவே முடிந்துவிட்டன.

இனி மேல் குறை கூறும் படலம் ஆரம்பமாகிவிடும்! நாலாபுறமும் தாக்குதலுக்கு உள்ளாவீர்கள். வில்வாத்ரி ஐயரின் கடம் பட்ட பாடு நீங்களும் படும்படி நேரிடலாம்!" என்றேன்.

* * *

ஏதோ அரசியல் லாபத்தைக் கருதித் தமிழ் விழா நடத்தினார்கள் என்ற பேச்சு யாழ்ப்பாணத்திலிருக்கும் போதே எங்கள் காதில் விழுந்து விட்டது. இது எவ்வளவு பிழையான கருத்து என்பதை அநுபவத்திலிருந்து நான் சொல்ல முடியும். இம்மாதிரி விழாக்களை நிர்வகித்து நடத்துகிறவர்கள் முடிவில் பெறும் லாபம் பல நண்பர்களின் மனஸ்தாபந்தான். "பேச இடந் தரவில்லை" என்றுசிலர் கோபப்படுவார்கள். "மேடையில் இடந் தரவில்லை" என்று வேறு சிலர் கோபிப்பார்கள். "பேசுவதற்குப் போதிய அவகாசம் தரவில்லை", என்று இன்னும் சிலர் தாபப்படுவார்கள். "தொண்டர்களாம் தொண்டர்கள்! என்னைப் பந்தல் முகப்பில் நிறுத்தி விட்டார்கள்!" என்று ஆத்திரப்படுவார்கள். "கவனிப்புப் போதவில்லை" "தனிப்பட உபசரிக்கவில்லை" என்றெல்லாம் குறைப்படுவோரும் உண்டு.

யாழ்ப்பாணத் தமிழ் விழாவை நடத்திய நிர்வாகிகளில் அரசியல் தொடர்பு உடையவர்கள் முக்கியமாக ஸ்ரீ எஸ். நடேச பிள்ளையும், கனம் கே. கனகரத்தினமும் ஆவார்கள். தமிழ் விழாவினால் இவர்களுக்கு முன் இல்லாத பிரபலம் புதிதாக ஏற்பட்டு விடவில்லை. பல மாத காலம் அல்லும் பகலும் உழைத்தார்கள்; பணம் வசூலித்தார்கள்; பாடுபட்டார்கள்; கவலைப்பட்டார்கள்.

மற்றப்படி வேறு லாபம் எதையும் அவர்கள் அடைய வில்லை. லாபம் அவர்களுக்குத் தேவையும் இல்லை. தாயினிடம் பக்தி செலுத்துவதற்கு லாபம் ஒன்று வேண்டுமோ? தமிழ்த் தாயைப் போற்றுவோர் தமிழின்பம் என்னும் தலை சிறந்த லாபத்தை அடைகிறார்கள். வேறு லாபம் அவர்களுக்கு எதற்கு?

கடைசியில், விமானம் ஒரு மாதிரி மனதைத் திடப்படுத்திக்கொண்டு புறப்பட்டது. நாங்களும் சேய்நாட்டிலிருந்து தாய்நாடு வந்து சேர்ந்தோம். எனக்கு முன்னுலேயே இலங்கைத் தமிழன்பர் ஒருவர் எழுதியனுப்பிய பின்வரும் பாடல் வந்து காத்திருந்தது. தமிழ் விழாவைக் கண்டு களித்த பல்லாயிரம் தமிழ் மக்களின் மனோ நிலையை இந்தப் பாடல் உண்மையாகப் பிரதிபலிக்கிறது என்று கருதுகிறேன். ஆகையால் அதை இங்கு வெளியிடுகிறேன். (எழுதியவர் : கல்வியந்துறை திரு நாகராஜன்.)

1. கன்னித் தமிழினைக் கண்டேன்—கவி
காட்டிடும் இன்ப ஊற்றினைக் கண்டேன்
சின்ன உளி கொண்டு செய்த—கலைச்
சிற்பம் கதை பல கூறிடல் கண்டேன்

2. யாழ் நகர் காணுத கூட்டம்—தன்னை
யானன்று தமிழ்விழா தன்னிலே கண்டேன்
'பாழ்பட்டு நிற்கின்ற' தென்று—அன்று
பாரதி நொந்த தும்பழங் கனவாச்சு !

3. வள்ளுவரும் அங்கு நின்ருர்—சபையில்
வாதிட்ட நற்கீரனும் அங்கு நின்ருர்
தெள்ளு தமிழெனக் கூறி—அயலார்
திகைத்திடச் செய்திட்ட பாரதி நின்ருர்

4. கூழுக்குப் பாடிய ஔவை—தமிழ்க்
கூழ் குடிப் பேரமென்று அங்ஙனே நின்றார்
ஊழுக்கிரையான அம்மை—தன்னை
ஊரறியச் செய்த இளங்கோவும் நின்றார்.

5. கல்விக் கடலெனக் கூறும்—கவி
கம்பனை அங்கொரு கம்போடு கண்டேன்!
சொல்சிறந்த தமிழ் வெள்ளம்—அங்கு
சொற் பெருக்காக வழிந்ததும் கண்டேன்!

தமிழ் நாட்டுக்கும் ஈழ நாட்டுக்கும் உள்ள தொடர்பு என்றென்றும் நிலைத்திருக்குமாறு தமிழ்த் தாய் அருள் புரியட்டும்.